## "MANNERS MAKETH MAN."

*Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*" Seek Truth wherever you can find it," But, " Make your choice and stick to it till you reach the End.*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." " TO THINE OWN SELF BE TRUE."

**EDUCATIONAL** **AND SOCIAL**




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம் தத்ஸத்.] [God is Love : Knowledge is Power : *Aum*

**"New Series"** ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.** **"Approved"**

புத்தகம். **24.**] நள௵ மாசி௴, **1917**௵ பிப்ரவரி௴ [சஞ்சிகை **11.**

### Business "Terms":

*N.B.*—To avoid all possibility of misapprehension, we *reiterate* our " terms" (approved by our constituents and by Government) which, from the beginning, are :—

1. Cash or Remittance with Order : Rs. 5 per Vol.; or,
2. *One month's credit at the arrears rate* : Rs. 6 per Vol.
3. Arrears to be cleared on rendering of *a/cs.* or by V.P.P.
4. All Indents registered for School Edition only and to begin with the current volume (corresponding with Tamil or Official year, April-March).
5. Subscriptions registered to continue from Vol. to Vol. and not to be discontinued in the middle of a Vol.
6. No popular edition issued owing to scarcity of paper.
7. Monthly parts (spare or sample) 8 (eight) annas each.

### General Notice.

☞ Owing to rarity of credit and scarcity of paper, we beg to make it clear and give notice to all that—

i. the *terms* offered are for regular subscribers only ;
ii. no exception to these rules can be made or recognised;
iii. short credit allowed should not be misused ;
iv. unpaid accounts are subject to " fluctuations " and overcharges ;
v. all arrears should be fully paid *within* three months (*time being an important factor*) ;
vi. every outstanding account will be charged *One Rupee Extra* per Vol. or any part thereof for every notice or Reminder sent after this period;
vii. all subscribers are *ipso facto* bound to observe the rules.

(*By Order of the Managing Committee.*)

THE MANAGING AGENTS, " VIVEKACHINTAMANI,"
*Novr.* 1916.] *Lalitalaya*, 19, *Adam Street*, *Mylapore.*

☞ *Calculations made are based on the principle of one copy for each school which should be strictly adhered to.*

*N.B.*—Due care is taken in addressing and personally handing copies to the Post Office at Brodie's Road and there the publishers' responsibility ceases. Evidence of posting is preserved and can be made available for enquiries The publishers do not undertake to replace missing copies but will endeavour to supply spare copies, when available, on payment, if applied for within 30 days after the 15th of each month for which such copies are due.

Notice of discontinuance to have effect must be given in time in writing before a New Volume begins in April and after all the arrears due to the end of the current Volume have been paid and account settled.

## "MANNERS MAKETH MAN"

H. E. LORD CHELMSFORD ON UNIVERSITY LIFE.

"MEN WITH CHARACTER AND PURPOSE."

"What, then, do we look for from you as a result of your university life? First that you should come out with your character formed and strengthened and that that character should be no unworthy one, and next that you should come out men ready to take up the duties of citizenship and play your part in the common life, in short, men with character and purpose. As I look back to my university days, I believe that even as undergraduates we dimly held by these two ideas, character and the responsibility of citizenship. For us it was largely a matter of tradition. On the walls of our colleges we could see the portraits of those who had played a great part in the life of the State. We took in the lesson of the past as naturally as we had imbibed our mother's milk. For you the task is a harder one. Your university is still young, and though you have had distinguished *alumni* in the past and you have them in the present, your tradition is not yet one of centuries. On your shoulders then lies the responsibility of moulding the tradition which is to be handed on. It was not for nothing that that great educational statesman, William of Wykeham, gave as the motto of his great school, Wynchester 500 years ago: "Manners maketh man," manners not in the superficial sense of to-day, but in the older sterner sense of the Latin *mores* "character." He did not leave it to his successors to evolve the note which his school should strike. He struck it once and for all. Time and subsequent generations have bowed before his prescience and marvelled at his insight into the heart of all education, and you with the innate imagination of your race can visualise this objective for yourselves more quickly than we of a Western stock. I have no doubt then that you will accept this first objective of your university life.

THE POLICY OF GOVERNMENT.

"Our policy then is first to secure that there shall be as many opportunities of a livelihood as possible open to the educated classes and next to endeavour to divert the students into channels other than those of law and Government clerical employ. I hope and believe that we shall be able to do so. Don't imagine that I promise the millennium for to-morrow or the next day. If we can lay the foundation of a policy which will increase the spheres of employment and at the same time switch off the overflowing stream of students into new channels of instruction, we shall at least have done something to remedy what is admittedly a very serious state of things.

INDUSTRIAL AND COMMERCIAL OPPORTUNITIES FOR INDIA'S SONS.

"India is asking for industrial and commercial opportunities for her sons. The Commission which is now sitting will, I hope, give us an answer which will enable us to secure this end. It will then be our duty so to train our students that when those opportunities are within their reach they shall be capable of grasping them.

THE CALL OF YOUR COUNTRY.

"The call, then, to your generation is, I believe, to educate your people and to improve their material welfare. For my part I promise you that I shall do all that is in my power to enable you to answer that call, and is it not a great call? Each one of you who takes up the profession of teacher* as a sacred calling and the teacher who regards his work as sacred has a great place in your history and will have the teachers' reward of knowing that he has raised his disciples out of the slough of ignorance and has made life full of meaning for them. And for those of you who throw in your lot with the industrial and commercial development of your country, apart from the material prizes which will be yours to win, there will be the vision of India emerging from a life of bare subsistence to a life with a higher standard of living and of comfort."

* "At the present time it is only regarded as a form of employment which will keep the wolf from the door until briefs come in, or some other permanent occupation be secured. This in not as it should be. The profession of teaching is a great and honourable profession and it should engage the whole attention of those who follow it. But this is not likely to be the case so long as teachers are paid an inadequate wage. If we are to divert students on to this road we must increase the pay and opportunities of our teachers and magnify the status of the teaching profession."

'No good work is ever lost." "My best wishes for the success of your publication"—*Sir Harold Stuart, K. C. V. O.*

புஸ்தகம்-24.] [சஞ்சிகை-11.

"The Children's Favourite, the Teachers' Help, and the Parents' Guide."

நள௵ மாசி௴ } விவேக  சிந்தாமணி { January-February. 1917.

ESTABLISHED 1892

"பெற்றோர்கள் தாழவப்பர் பிள்ளைகளி லாசையுள்ளோர்
கற்றே மெனவுகந்து கற்பர் பின்னும்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னேஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

## REFORM OF RURAL AND ELEMENTARY EDUCATION.

## கிராமவாசத்துக்கின்றியமையாத பிரதம வித்யா சீர்திருத்தம்.

பிரதமவித்தை யென்பது ஆரம்பப்படிப்பு. அக்ஷராப்பியாசம் முதல் "படிப்பு" என்பதெல்லாம் மனம்படியப் பெறுவதற்கான சாதனங்களன்றி வேறல்ல. மனம்படியப் பெறுவது இருவிதம். விஷயங்களை ஊன்றி உணர்ந்து ஆராய்ச்சி செய்து அறிவதற்கு வேண்டிய படிமானம் அல்லது சிக்ஷை பெறுவது ஒருவிதம். விஷயவாசனை இவ்வாறு பற்றியபின் விஷயப்பற்றை விட்டு உள்ளுணர் சக்தியை உற்றுணர்ந்து ஆய்ந்து அறிவதற்கான சிக்ஷை பெறுவது ஒருவிதம். முன்னது குழந்தைகளுக்கும் பின்னது உலகஞானிகளுக்கும் இன்றியமையாத படிப்பாக அமையும். குழந்தைகள் விஷய ஆராய்ச்சிக்குவேண்டிய சிக்ஷையின்றி உலகத்தை ஆய்ந்தறியக்கூடிய சக்தி அமையப்பெறார். உலகஞானம் பெற்றவர்கள் விஷயப்பற்றைவிட்டு விஷயங்களைப்பற்றும் கருவியாகிய மனதின் செய்கைகளை ஆய்ந்தறிந்து தேறுவதற்கு இரண்டாவதான நிவிர்த்திதீக்ஷையென்று சொல்லும் சிக்ஷை பெற்றிருக்கவேண்டும். இந்த இருவித சிக்ஷைகளுக்கு பிரவிர்த்திமார்க்கம், நிவிர்த்திமார்க்கம் என்று சொல்லப்படும்.

கனம்பொருந்திய இராஜப்பிரதிநிதி லார்ட் செம்ஸ்போர்ட் அவர்கள் கல்கத்தா ஸர்வகலா சங்கத்தலைவராக விருந்து அதன் வருஷாந்தக் கூட்டத்தில் (Convocation) பேசியபோது ஸர்வகலாசாலையில் படிப்பது பிள்ளைகளை உலகத்தில் நடந்துகொள்வதற்கு வேண்டிய பக்குவமுடையவர்களாகச் செய்யத்தக்கதாயிருக்கவேண்டுமென்றும் அப்படிக்கில்லாதவரையில் ஸர்வகலாசாலைப் படிப்புப் பிரயோசனமற்றதாகுமென்றும் சொன்னார். இதற்கு முக்கிய சாதனம் என்னவென்றால் குணப்பயிர்ச்சி (cultivation of character) என்று சொன்னார். இது உண்மையே.

ஆனால் இந்த குணப்பயிர்ச்சி யென்பது ஸர்வகலாசாலையிற் படிப்பவர்களுக்குத்தான் முக்கியமென்று சொல்லக்கூடாது. குணமின்றி மணமில்லையால், குணப்பயிர்ச்சி ஆதி முதல் கவனிக்கப்படத்தக்கதேயாகும். அக்ஷராப்பியாசம் செய்யும் குழந்தைகளுக்கும் குணப்பயிர்ச்சிதான் பிரதானம். குணப்பயிர்ச்சியின்றி மனப்பயிர்ச்சியில்லை. எட்டுப்படிப்பினால்மட்டும் பிரயோசனமில்லை. எட்டுப்படிப்பு மனோசிக்ஷைக்கனுகூலமாயிருப்பதனாலும் அதனால் மனோசிக்ஷையை மேன்மேலும் விர்த்தி செய்துகொள்ள சாதகமிருப்பதாலும் அதற்கு விசேஷ மதிப்புண்டேயன்றி மற்றப்படி அதற்கு விசேஷமதிப்பில்லை.

எழுதப்படிக்கத் தெரியாமலே மனப்பயிர்ச்சியில் மிகத் தேர்ந்து பரமயோகிகளாகவும் பிரஹ்ம ஞானிகளாகவுமுள்ள பேர்கள் எத்தனையோபேர் எல்லாதேசங்களிலுமிருந்திருக்கிறார்கள். இந்தியாவில் முக்கியமாய் ஏட்டுப் படிப்பிலும் மனம்படியப் பெறுவதாகிய படிப்பு (மனப்பயிர்ச்சி) தானே விசேஷமாக மதிக்கப் படுகிறது. கல்கத்தா ஹைகோர்ட்டு ஜட்ஜிகளில் ஒருவராகிய கனம். ஸர் ஜான் வூட்ராப் அவர்கள் இப்பத்திராசிரியார் தயார்செய்த நாட்டுப் படிப்புச் சீர்திருத்தத்தைப்பற்றிய குறிப்பைப் பார்வையிட்டு அவருடைய அபிப்பிராயத்தை வெளியிட்டெழுதிய கடிதத்தை சென்ற சஞ்சிகையில் வெளியிட்டிருக்கிறோம். அதன்பிரதியொன்று இந்தியா கவர்ன்மெண்டில் வித்யா இலாகா மந்திரியாகவிருக்கும் கனம். ஸர் சங்கரன் நாயர் அவர்களுக்கும், சென்னை வித்யா இலாகாத் தலைவர்க்கும், வித்யா இலாகா கவர்ன்மெண்டு காரியதரிசி அவர்களுக்கும் லோகல் அண்ட் முனிசிபல் டிபார்ட்மெண்டு கவர்ன்மெண்டு காரியதரிசியவர்களுக்கும் அனுப்பிவைத்தோம். அவர் சொல்வது என்னவென்றால்:—மேற்படி குறிப்பில் இப்பத்திராசிரியர் எடுத்தோதிக் குறிப்பிட்டுள்ள வித்யா தத்துவங்களெல்லாம் அவர் ஒப்பத்தக்கவையாகவே யிருக்கின்றன. இப்பொழுது பள்ளிக்கூடங்களிலும் கலாசாலைகளிலும் போதிக்கப்படும் படிப்பு மனம் படியப் பெறுவதற்கு அனுகூலமான படிப்பாகவில்லை யென்பது உற்று நோக்குவார் எல்லாருக்கும் விளங்கும்.

முதலாவது ஜனங்கள் ஏட்டுப்படிப்பையும் மனம்படியப் பெறுவதற்கான படிப்பையும் அவ்விரண்டுக்குமுள்ள வித்யாஸம் தெரியாமல் இரண்டையும் ஒன்றாக நினைத்து வியவகரிக்கிறார்கள். இது தப்பு. இந்தத் தப்பு அபிப்பிராயம் மனதிற் குடிகொண்டிருப்பதினால் விளையும் வில்லங்கத்துக்கு அளவில்லை, எழுத்து வாசனையறியாதவன் (எழுதப்படிக்கத் தெரியாதவன்) மனப்பயிர்ச்சியுள்ளவனாக விருக்கலாம். ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸதேவர் எழுதப் படிக்கத்தெரியாதவராயிருந்தும் ஞானக்களஞ்சியமாயிருந்து வித்வத்சிரோமணிகளெல்லாம் தலைவணங்கி அவரைக் கொண்டாடும்படியான அவ்வளவு மஹிமைபெற்று விளங்கினர். இது அவருடைய மனோபக்குவத்தினால் உண்மையறியக்கூடிய சாமர்த்தியம் வாய்ந்தவராயிருந்ததுபற்றி யென்று யாவருக்கும் நாம் சொல்லாமலே விளங்கும். ஸர் ஜான் வூட்ராப் அவர்கள் ஸர் ஜியார்ஜ் பார்ட்வூட் அவர்கள் அபிப்பிராயத்தை யெடுத்தாண்டு இந்தியாவிலுள்ள வியவசாயக்குடிகள் எழுதப்படிக்கத் தெரியாதவர்களாயினும் உலகத்திலுள்ள இதரதேசங்களின் வியவசாயக்குடிகள் எல்லாரிலும் அதிக மனப்பயிர்ச்சி வாய்ந்தவர்களா யிருக்கிறார்களென்பது உண்மையென்று வற்புறுத்துகிறார். மனம் படியப்பெற எத்தனையோ வழி வகைகளுண்டு. அவை யெல்லாவற்றுக்கும் மூலாதாரமாக விருப்பது பிரகிருதிஞானம். இதைப்போதிக்கும் வகையைத்தான் பிரகிருதிவித்தை (Nature-Study) யென்று புகழ்ந்து சொல்கிறார்கள். பிரகிருதிஞானம் என்பது (Book of Nature) என்று சொல்லும் பிரகிருதி தத்துவங்களை உற்றுநோக்கி யுணரும் மனோசக்தியினால் உண்டாகிறது. அந்த மனோசக்திக்கு 'உற்று நோக்கி யுணர்தல்' தானே மூலகாரணம். இந்த சக்திதான் இக்காலத்தில் படித்துத் தேறி வித்யா பட்டங்கள் பல பெற்றவர்களிடத்தில் மிகவும் குறைவாயிருக்கிறது. இது எல்லாருக்கும் தெரிந்தவிஷயம். ஆனாலும் படாடோபத்தினால் இப்பட்டம் பெற்றவர்கள் வாச்சா மஹோசரமாய்ப்பேசிப் பிழைக்கிறார்கள். இத்தேசத்தில்தான் இப்படியென்றால், இதரதேசங்களிலும் இப்படியே தானிருக்கிறது என்று ஸர் ஜான் வூட்ராப் அவர்கள் எழுதியிருப்பதாலும் லார்ட் ஹால்டேன் முதலானவர்கள் செய்முயற்சியாலும் விளங்குகிறது. "இந்த உலகத்தில் இப்பொழுதிருக்கிற அவ்வளவு நுனிப்புல்மேய்ந்து படித்தவர்கள் என்று பேரும் பட்டமும்பெற்றுப் படாடோபம் செய்துவருகிறவர்கள் வேறு எந்தக் காலத்திலும் இருந்திருக்கமாட்டார்கள் என்பது எனது அபிப்பிராயம். அவர்களில் அனே

கர் உயர்ந்த வித்யாபட்டங்கள் பெற்றவர்களாக விருக்கலாம். இருந்தாலும் அவர்கள் மனப்பயிர்ச்சி யில்லாதவர்களேயென்பதிற் சந்தேகமில்லை. படித்தவர்கள் என்று பேர்பெற்று விளங்குபவர்களில் பெரும்பாலரும் படித்துள்ளபடிப்பு மேற்பூச்சுப் படிப்பே யன்றி வேறில்லை. அவர்கள் கசடறக்கற்காமல் 'கசடு நிறையக் கற்றவர்கள்' ஆதலால், அவர்கள் கற்றகல்வி ஸ்வபாவமாக அவர்களுக்குள்ள குணவிசேஷங்களையும் கெடுத்துவிட்டதென்றே சொல்லலாம்."

உற்றுநோக்கி ஆராய்ந்துபார்த்தால் இந்த அபிப்பிராயம் உண்மையென்றே சொல்லலாம். "ஊமையனுக்கு உளறுவாயன் சண்டப்பிரசண்டன்" என்கிறபடி ஏட்டுப்படிப்புப் படியாதவர்களைவிட அந்தப்படிப்புப் படித்தவர்களாய் "சண்டப் பிரசண்டமாய்ப்" பேசிப் படாடோபம் செய்தாலும் அவர்கள் மனப்பயிர்ச்சியில்லாதவர்களே. ஏனென்றால் மனம் படியப் பெறாமலே அத்தனை படாடோபமும் செய்கிறார்கள். இவர்களை வெகு எளிதில் கண்டுபிடித்துக் காட்டிவிடலாம். ஆனால் "நிர்வாண தேசத்தில் கோவணம் கட்டியவன் பைத்தியக்காரன்" என்கிற பழமொழிப்படி, மனம்படியப் பெறாதவர்கள் ராஜ்ஜியத்தில் மனம்படியப் பெற்றவனுக்கு மதிப்பில்லை. மதிப்பில்லாத விடத்தில் தலை யிட்டுக்கொண்டால் அவமதிப்பு உண்டாவது நிச்சயம். ஆதலால்தான் பெரியோர் "மதியாதார் தலைவாசல் மிதிக்க வேண்டாம்" என்று மூதுரை ஓதியிருக்கிறார்கள். மனம் படியப்பெறாதவன் கொடிய மிருகத்துக்குச் சமானம். அப்படிப்பட்டவர்களுடைய சகவாசம் எப்பொழுதும் நீக்கத்தக்கதே. ஆனால் எல்லாரும் அப்படியிருந்தால் என்செய்கிறது? என்று ஒருகேள்வி பிறக்கலாம். அதுதான் அவரவர் குணத்தைப் பொறுத்தது. விவேகிகள் வருங்கேடறிந்து முன் ஜாக்ரதையாயிருந்து நீக்குவர். விவேக நுட்ப மில்லாதவர்கள் பட்டனுபவித்தபின் புத்தி வந்து மறுபடியும் கேடுவராதபடி அப்போதப்போது உஷாராயிருந்து தப்பிவருவர். அவிவேகியோ, துன்பப்பட்டு இன்பத்துக் காசைப்பட்டு வருந்துவர். இவர்கள் குணவிசேஷங்களை "வருமுன் காப்போன், வருங்கால் காப்போன், வந்தபின் காப்போன்" கதையில் நன்றாகக் காணலாம்.

## THE VICEROY ON EDUCATION.

## வித்யா விஷயமாய் அரசப்பிரதிநிதியவர்கள் அபிப்பிராயம்.

நமது இராஜப் பிரதிநிதி கனம்பொருந்திய லார்ட் செம்ஸ்போர்ட் அவர்கள் வித்யாவிஷயமாய் இரண்டு முக்கியமான பிரசங்கங்கள் செய்திருக்கிறார். ஒன்று கல்கத்தா யூனிவர்ஸிடியின் தலைவராகவிருக்கும் முறையில் அந்த யூனிவர்ஸிடியின் கான்வொகேஷன் (வருஷாந்தரக்கூட்டம்) மீட்டிங்கில் செய்த பிரசங்கம். மற்றொன்று ஜனவரிமீ 22உ டில்லியில் கூடிய வித்யா இலாகா டிரெக்டர்கள் கான்பரென்ஸ் சபையைத் துவக்கச்செய்த பிரசங்கம். கல்கத்தாவில் அவர் சொல்லியதில் முக்கியபாகமாயுள்ளதை யெடுத்து முகட்டில் அச்சிட்டிருக்கிறோம்.

### THE AIM OF UNIVERSITY LIFE.

### ஸர்வகலாசாலைப் படிப்பின் நோக்கம்.

ஸர்வ கலாசாலையில் புகுந்து படிக்கிறவர்கள் "பழையகுருடி கதவைத்திறவடி" யென்று அவர்களுடைய மனப்பயிர்ச்சி விர்த்தியடையாமல் திரும்பினால், அப்பொழுது கலாசாலைகளினால் ஜனசமூகத்துக்காவது ராஜாங்கத்துக்காவது யாதொரு பிரயோசனமுமில்லை. ஆனால் சர்வகலாசாலைப்படிப்பின் நோக்கம் அதில் நுழைந்தவர்கள் மனம் படியப்பெற்று குணமும் மணமும் நிறைந்தவர்களாய் உலகவாழ்க்கையில் உண்மையாக ஈடுபட்டுழைக்க இன்றியமையாத மனோபக்குவம் அமைந்தவர்களாய்த்திரும்புவது சாத்தியமாகச் செய்வதாயிருக்கிறது.

### CHARACTER & PURPOSE.

### குணமும் மணமும்.

இந்த நோக்கத்தை மறக்காமல் மனதில் வைத்து ஸர்வ கலாசாலைப்படிப்பு சம்பந்தப்பட்டவர்களெல்லாரும் அங்கேபோய்ப் படித்துத் திரும்புகிறவர்கள் குணமும் மணமும் நிறைந்தவர்களாயிருக்கப் பார்க்கவேண்டியது அவசியம்.

"MANNERS MAKETH MAN"

"குணமே மணம்"

உவின்சஸ்டர் ஸ்கூல் தலைவரான (William of Wykeham) உவில்லியம் என்பவர் வித்யா விஷயத்தில் தேர்ந்தவரான அரசியல் நிபுணர். அவர் 500-வருஷங்களுக்குமுன் உவின்சஸ்டர் ஸ்கூல் தலைவராக விருந்தபொழுது மனிதனுக்கு மணமளிப்பது குணமேயென்று பள்ளிக்கூட வாசலில் எழுதிவைத்தார். இந்த மூதுரையைக்கொண்டு அந்தப் பள்ளியில் போதனாசிரியர்களாயிருந்தவர்கள் எல்லாரும் பிள்ளைகளின் குணம் படியச் செய்வதே தங்கள் கடமையாக முனைந்துழைத்து வந்தார்கள். அப்படியே இந்தியாவிலுள்ள ஸர்வகலாசாலைகளும் குணத்தைப்பெருக்கி மணத்தை யுண்டுபண்ண வேண்டுமென்று வற்புறுத்திக் கூறினர்.

சர்க்கார் நோக்கம்.

இந்தியாவில் ஸர்வகலாசாலைகள் ஏற்படுத்தினபொழுது அங்கே போதிக்கச் செய்யப்பட்ட ஏற்பாடு இதுவரையில் சர்க்கார் சிப்பந்திகளும் லாயர்களும் உண்டுபண்ணுவதிலேயே உபயோகமாயிருந்துவந்தது. இப்பொழுது ஸர்க்கார் சேவகம் வித்யாபட்டம் பெற்றவர்களுக்குக் கிடைப்பது அருமையாய்விட்டது. கிடைத்தாலும் உத்தியோகங்கள் கொஞ்சமாகவும் அதற்கு ஆசைப்படுகிறவர்கள் தொகை பலமடங்கு அதிகப்பட்டதாகவு மிருக்கிற காரணத்தால், பெரும்பாலார் அவர்கள் மனோரதம் நிறைவேறாது ஆசைப்பட்டு மோசம் போனவர்களாய் மனக்கிலேசமடைந்து கவர்ன்மெண்டுமேல் குற்றங்கூறுகிறவர்களாக மாறிவிடுகிறார்கள். இதுகவர்ன்மெண்டுக்கு இடைஞ்சல் விளைப்பதாயிருப்பதால், வித்யாபட்டம் பெற்றவர்களுக்கு வேறு ஜீவனவழி காட்ட வேண்டியது அவசியமாயிருக்கிறது. இதை அனுசரித்து வர்த்தக வியாபாரத்துறைகளில் இறங்குவதற் கனுகூலமான படிப்புச் சொல்லித்தர முயற்சிக்கவேண்டுமென்றார்கள். இஃதோடு வித்யாபோதகர்கள் ஏராளமாகவேண்டியிருப்பதால் அத்துறையில் பெரும்பாலார் இறங்கியுழைக்கத்தக்கதாக ஏற்பாடுகள் செய்யவேண்டுமென்பது சர்க்கார் நோக்கமாயிருக்கிறது என்று சொன்னார்.

இந்தியர்களின் கடமை.

இந்தியாவில் கைத்தொழில் வியாபார விர்த்தி அதிகமாயிருக்கவேண்டுமென்று எங்கும் முறையிடுகிறார்கள். அதற்காக ராயல் இண்டஸ்டிரியல் கமிஷன் ஒன்று நியமித்து தற்போது அந்தக் கமிஷன் சபையார் சென்னைக் கோட்டையிலுள்ள கௌன்ஸில் ஹாலில் உட்கார்ந்து சாக்ஷி விசாரணை செய்துவருகிறார்கள். அவர்கள் ரிபோர்ட்டை யெதிர்பார்த்து அதற்குவேண்டிய அனுகூலங்களெல்லாம் அமையச்செய்ய வேண்டியது சர்க்கார் நோக்கமாக விருக்கிறது. இஃதோடு கல்கத்தா யூனிவர்ஸிடி சம்பந்தமாக ஒரு கமிஷன் நியமிக்கவும் உத்தேசமென்று வெளியிட்டார்.

ஜனசிரத்தை வேண்டும்.

ஜனவரிமீ 22உ டில்லியில் கூடிய வித்யா இலாகாத் தலைவர்கள் கான்பரென்ஸ் சபைமுன் பேசியதில் வித்யா சம்பந்தமான விஷயத்தில் ஜனங்கள் சிரத்தையெடுத்துக்கொள்ள வேண்டியது அவசியமும் மிகமுக்கியமானதாயுமிருக்கிறது என்று சொன்னார். இங்கிலாந்தில் ஜனங்கள் அசிரத்தை பாராட்டி வந்ததால் நேர்ந்த கெடுதிகள் இந்த யுத்தம் நேர்ந்ததில் வெள்ளிடை மலைபோல் விளங்கலாயிற்றென்றும், இப்பொழுது அவர்கள் சிரத்தை யெடுத்துக்கொள்ள ஆரம்பித்திருக்கிறார்களென்றும் சொன்னார்.

போதகாசிரியர் தொழில்.

போதகாசிரியர் படிப்பு விஷயத்தில் இன்றியமையாதவர்களாதலால், அவர்கள் தொழிலுக்கு ஒரு கௌரவமும் அந்தஸ்துமுண்டாகச் செய்யுவேண்டுமென்று சொன்னார். பள்ளிப்படிப்பு பயன்படுவதாக, லார்ட் செம்ஸ்

போர்டு கூறியபடி, முதலாவது, உபாத்தியாயர்கள் (போதகாசிரியர்) வேண்டும்; இரண்டாவது அவர்களை நன்றாகப் பழக்கித் தேற்றல் வேண்டும். இவ்விரண்டும் ஆனபின் அவர்கள் அத்தொழிலைவிட்டு வேறு தொழிலுக்குப் போய்விடாதபடி அத்தொழிலிலிருந்து பக்தி சிரத்தையோடு உழைக்க வசதியேற்படுத்தவேண்டும். இதற்காக அவர்களுடைய சம்பளங்களை உயர்த்தி அவர்களுக்கு அந்திய காலத்தில் பென்ஷனோ, வேறு உபகார சம்பளமோ கிடைக்கக் கூடியதாக ஒரு நிதி யேற்படுத்தவேண்டும். இந்தமாதிரி "டீச்சர்ஸ்ப்ரொவிடெண்டுபண்டு" ஒன்று ஏற்படுத்த மூன்று வருஷங்கள் முன் எடுத்துக்கொண்ட ஆலோசனை முடிவுபெறுமல் இன்னும் ஆலோசனையில் தானேயிருக்கிறது. அதை ஒரு விதத்தில் அனுகூலாஸ்பதமாக முடிவுசெய்து அனுஷ்டானத்துக்குக் கொண்டுவரல்வேண்டும்.

### கைத்தொழில் வேலைகள்.

கைத்தொழில் வேலைகளில் பழக்கம் ஏற்பட பள்ளிப்படிப்புமட்டும்போதாது. அஃதோடு வேலைச்சாலைகளில் புகுந்து வேலைசெய்து பழகல்வேண்டும். இந்த சாதனம் ஏற்படாத வரையில் ஏட்டுப்படிப்புமட்டும் கைத்தொழிலுக்குச் சாதகமின்றி பாதகமே விளைப்பதாகும்.

### பெண்கள் கல்வி.

பெண் கல்வி இப்பொழுது மிகப் பின்னடைந்திருப்பது தேச க்ஷேமத்துக்கு நன்மை விளைப்பதாகவில்லை. ஆணும் பெண்ணும் மனதொத்து வாழ்ந்தால் இல்லற தர்மமும் அஃதேபோல் அரசியல் தர்மமும் சிறப்பெய்தி விளங்கும்: இந்தக் குறைநிறைய முயற்சி செய்யல்வேண்டும்.

### ஸ்வபாஷாஞானம்.

படிப்புச் சொல்லிக்கொடுப்பதில் அந்நிய பாஷையில் போதிக்க வேண்டியிருப்பதால் நேரிடும் அநர்த்தங்கள் எத்தனையோ உண்டு. ஸ்வபாஷையில் போதித்தால் மனப்பயிர்ச்சிக்குச் சாதனம் அதிகமாகவுண்டு என்பதில் சந்தேகமில்லை. ஆகையால் எந்தமட்டும் ஸ்வபாஷையில் போதிக்கவேண்டும்: அல்லது ஸ்வபாஷையைவிட்டு இங்கிலீஷில் தாமேன அதிக முயற்சி யெடுத்துக்கொண்டு போதிக்க வேண்டுமென்று தீர்மானிப்பது மிகவும் முக்கியமான விஷயமாகவிருக்கிறது. ஸ்வபாஷையில் போதிப்பது மனப்பயிர்ச்சிக்கு மெத்த அனுகூலமென்பது மறுக்கக்கூடாததாயிருக்கிறதுண்மையாயினும் இதைப்பற்றி அபிப்பிராயபேதம் அதிகமாயிருக்கிறதென்று அவருக்குத் தெரியும். ஆதலால் இந்த விஷயத்தின் முக்கியத்தை மட்டும் வற்புறுத்தி இதைத் தீர்க்காலோசனைக் கேற்றதோர் முக்கிய விஷயமாக எடுத்துக் கூறினர்.

### வித்யா இலாகாத் தலைவர்கள் கான்பரேன்ஸ் நோக்கம்.

இந்த வித்யா இலாகாத் தலைவர்களின் கான்பரென்ஸ் கூடியதின் நோக்கம் என்னவெனில், யுத்தச்செலவு காரணமாக வித்யா விஷயமாய் வேண்டிய அளவு செலவு செய்யக் கூடாமலிருக்கிறபடியால், பிரதம வித்தை, மத்தியதரவித்தை, காலேஜ் படிப்பு என்கிற மூன்றுதர வித்தையில் இருக்கிற தொகையை யெப்படிச் செட்டுமட்டுமாய்ச் செலவு செய்யலாமென்று யோஜித்துத் தீர்மானிக்கவேயன்றி வேறொன்றுக்குமல்லவென்று சொன்னர். அரசர்பிரதிநிதி கான்பரென்ஸ் துவங்கப்பேசியபின் வித்யாமந்திரியாகிய கனம். ஸர். சங்கரன்நாயர் அவர்கள் அக்கிராசனத்தை வகித்து நடபடிக்கைகளை நடத்தினர். அவர்கள் செய்த தீர்மானங்கள் இன்னும் வெளியாகவில்லை.

## The Hon'ble Dewan Bahadur P. Rajagopala Chariar Avl, C. I. E.

## கனம். திவான் பஹதூர் பெ. இராஜகோபாலாச்சாரியார் அவர்கள். ஸி. ஐ. இ.

Intimation has been received that His Majesty the King has approved the appointment of the Hon'ble Diwan Bahadur PERUNGAVUR RAJAGOPALA ACHARIYAR Avargal, C.I.E., to be Member of the Executive Council in succession to the Hon'ble Sir P. S. Sivaswami Ayyar, K.C.S.I., C.I.E.

சென்னை ராஜதானியின் நிர்வாக சபையில் வருகிற பிப்ரவரி மாதம் 27-ந் தேதியன்று காலியாகப்போகும் இந்தியமெம்பர் ஸ்தானத்திற்கு கனம் திவான்பஹதூர் பெ. இராஜகோபாலாச்சாரியரின் நியமனத்தை மகாராஜா ஜார்ஜ் சக்கிரவர்த்தி அங்கீகாரம் செய்துவிட்டார் என்ற சமாச்சாரம் இன்றையதினம் நமக்கெட்டியிருப்பதை மிக்க சந்தோஷத்துடன் மேலே பிரசுரிக்கிறோம். திவான்பஹதூர் இராஜகோபாலாச்சாரியரின் நியமனம் பொதுஜனங்கள் எல்லோருக்கும் ஸர்வ சம்மதமானதென்பதை நாமெடுத்துச் சொல்லவேண்டியதில்லை. இவருடைய பிரதாப வரலாற்றைப் பற்றிச் "சுதேசமித்திரன்" எழுதியிருப்பதவ்வளவும் உண்மையே. காகிதப் பஞ்சநிமித்தம் அப்பத்திரிகையின் வருஷ சந்தா ரூ. 18-க்கு உயர்த்தப்பட்டிருக்கிறது.

### பிறப்புவளர்ப்பு, படிப்புப் பிரதாபம்.

"அவர்சென்ற 1862-ம் வருஷத்தில் செங்கற்பட்டு ஜில்லா பெருங்காவூர் என்னும் கிராமத்தில் பிரபலமான குடும்பத்தில் பிறந்தவர். அவருடைய தகப்பனார் ராஜாங்க அலுவலில் டிப்டிகலெக்டர் அந்தஸ்திலிருந்து இராஜகோபாலாச்சாரியாரை சென்னை பிரஸிடென்ஸி காலேஜில் கல்விகற்க வைத்தார். இராஜகோபாலாச்சாரியார் கல்வியில் மிகத் திறமை காட்டி எம். ஏ., பி. எல்., பரீக்ஷைகளில் தேர்ச்சியடைந்தார். அப்போது இந்தியர்களும் ஸிவில் ஸர்விஸிற்கு ஸமமான உயர்ந்த பதவிகளை ஐரோப்பியர்களைப்போல் பெறவேண்டுமென்று அக்காலத்தில் வற்புறுத்திவந்ததின் பலனாக "ஸ்டாடுடேரி ஸிவில்ஸர்விஸ்" என்னும் புதியவகுப்பு உத்தியோகங்களைசிருஷ்டித்தகாலத்தில் அதற்காக முதன்மையாகநடத்தின போட்டிப் பரீக்ஷையில் மிஸ்டர் ராஜகோபாலாச்சாரியார் பிரதமஸ்தானம் பெற்றுத்தேறினார். ஆனால் அவரையும் இரண்டாவது இடம் பெற்ற காலஞ்சென்ற டி. சுப்பராவையும் கவர்ன்மெண்டார் நியமனம்செய்யாமல் மூன்றாவதாகவிருந்த ராஜா டி. ராமராவின் குமாரரான பி. வரதராவுக்கு ஸிவில்ஸர்விஸ் உத்தியோகம்கொடுத்தார்கள்.

### உத்யோக வரலாறு.

முடிவில் 1886-ம் வருஷத்தில் ஆச்சாரியாருக்கு டிப்டிகலெக்டர்வேலைகொடுத்தார்கள். அந்தஉத்தியோகத்தில் நாமக்கல் டிவிஷனில் நடந்த கலகத்தை யடக்கும் விஷயமாய் அவர்காட்டிய திறமையை மிகமெச்சி ஜில்லா கலெக்டர் செய்த சிபார்சின்பேரில் மிஸ்டர் ஆச்சாரியாரை வரதராயரைப்போல் அஸிஸ்டண்டு கலெக்டராக் 1888-ம் வருஷத்தில் நியமித்தார்கள். பிறகு பல ஜில்லாக்களில் உதவி கலெக்டர் ஸ்தானத்தில் மிகசாமர்த்தியத்துடனும் நற்பெயருடனும் வேலை பார்த்து, கொச்சி தேசத்து ராஜாவின் வேண்டுகோளுக்கிணங்க அத்தேசத்திய திவானாக 1896-ம் வருஷத்தில் அனுப்பப்பட்டார். கொச்சி சமஸ்தானத்தின் நிர்வாகத்தை அவர் வெகு ஊக்கத்துடனும் திறமையுடனும் நடத்தி ராஜாங்கத்தின் திரவிய நிலைமையையும் நிர்வாக நிலைமையையும் படிப்படியே முன்னுக்குக் கொண்டுவந்த பிறகு அதை விட்டுத் திரும்பவும் 1902-ம் வருஷத்தில் பிரிட்டிஷ் ஸெர்விஸுக்குத் திரும்பி சில மாதம் சேலம் ஸெஷன் ஜட்ஜியாகவிருந்து, கர்னூல் ஜில்லா கலெக்டராக நியமிக்கப்பட்டார். அதில் இரண்டு வருஷங்கள் இருந்த பின்னர் புதிதாக ஏற்படுத்தப்படுவதாகவிருந்த ஐக்கியநாணயச் சங்கங்களை உற்பத்தி செய்வித்து விருத்தியாக்கவேண்டிய மிகப் பொறுப்பான கோவாபரேடிவ் ஸொஸைடிகளின் ரிஜிஸ்டிரார் உத்தியோகத்தை சென்னை கவர்ன்மெண்டார் அவரை ஏற்கச்செய்துவிட்டார்கள்.

### ஏழைக்கிரங்கி.

இந்த உத்தியோகத்தைக் காரணமாய்க் கொண்டு அவர் மூன்று வருஷங்களுக்கு மேற்பட்டு தமது தாய் நாட்டின் ஏழைக் குடிகளுக்கும் பாமரஜனங்களுக்கும்

சுவல்ப ஜீவனக்காரர்களுக்கும் தங்கள் தங்கள் தாழ்ந்த ஸ்திதியிலிருந்து ஐக்கியசங்கங்கள் மூலமாய் நாளடைவில் அகன்று முன்னேற்றமடையவும், மற்றும் கூட்டுறவைத் தங்களுள் அதிகரித்து, பொதுவாழ்வையும் நாட்டாரின் க்ஷேமத்தையும் பெருகும்படியாகவும் வழிகாட்டி அதற்காகப் பெரும்பாடுபட்டிருக்கிறார் என்பது நாடெங்கும் பிரசித்தியன்றோ. இந்தக் காரியத்தில் அவர் விதைத்தவிதை அவர் ரிஜிஸ்டிராரா யிருக்கும்போதே வேரூன்றி முளையிட்டு, பிறகு சர்க்காரின் போஷணை குறைவா யிருந்தும் தழைக்க ஆரம்பித்து விட்டதை யாவரு மறிவார்கள். கோவாபரேடிவ் ரிஜிஸ்டிரார் பதவியில் மிஸ்டர் ராஜகோபாலாச்சாரியார் சிலகாலமிருந்தபிறகு 1907-ம் வருஷத்தில் திருவாங்கூர் மகாராஜாவின் ஸமஸ்தானத்திற்கு திவானாக நியமனம் பெற்று திருவனந்தபுரம் சென்றார்.

அங்கே ஆறு வருஷகாலம் ராஜ்யதந்திரத்தையும் ராஜ்யநிர்வாகத்தையும் மிகச் சிறப்புடனும், ஒன்றிரண்டு விஷயத்தில் சற்றுக்கடுமையுடனும் நடத்தி தாழ்வடைந்திருந்த திரவிய நிலைமையை மிக நல்ல ஸ்திதிக்குக் கொண்டுவந்து அதிகாரிகள் மிகநெறியுடனும் நேர்மையுடனும் வேலை பார்த்துவரச்செய்து பலவிதத்திலும் ராஜாங்கத்தை நல்லவழியில் ஏற்படுத்தியிருக்கிறார். இப்படி திவானாக யிருக்கும் போதுதான் அவருக்கு 1907-ம் வருஷத்தில் திவான் பஹதூர் பட்டமும், 1908-ம் வருஷத்தில் ஸி. ஐ. ஈ. பட்டமும் அளிக்கப்பட்டன. அவ்விடம் தாம் திவானாக விருக்கக் குறிப்பிட்டகாலம் முடிந்ததும், பிரிட்டிஷ் ஸர்விஸுக்குத் திரும்பினார்.

### கவர்ன்மெண்டு செக்ரிடேரி.

ராஜ்யநிர்வாகம் படிப்படியே செலுத்திவந்த இந்திப் பிரமுகருக்கு திரும்பவும் ஜில்லா கலெக்டராக வேலை பார்க்கும் சிறுமையே ஏற்படும்போலிருந்தது. ஆகிலும், புதிதாக சென்னை கவர்ன்மெண்டார் ஏற்படுத்திய செகரிடேரி பதவிக்கு அவரை 1913-ம் வருஷத்தில் நியமித்தார்கள். இந்த ஸ்தானத்தில் கனம். கவர்னருக்கு அவருடைய சாமர்த்தியமும், சாதுர்யமும் நிர்வாகசக்தியும் நன்கு புலப்பட்டதே இந்த நிர்வாக சபை மெம்பர் உத்தியோகத்திற்கு அவர் நியமனம் பெற்றதற்கு முதற்காரணமாகும்.

## கவர்ன்மெண்டு மெம்பர்.

அனுதாபம் அனுபோகம் இரண்டும் நிறைந்தவர்,

ஆகவே இந்தியர்களின் பிரதிநிதியாயிருந்து, அவர்கள் தேவைகளையும் குறைகளையும் அபீஷ்டங்களையும் ராஜாங்க நிர்வாகத்தில் கவர்ன்மெண்டாரை உணரச் செய்வதற்கும், கனித்து பரிகாரங்கள் செய்யும்படி செய்வதற்கும், வேண்டியகுணங்கள் யாவும் அவரிடம் பொருந்தியிருக்கிறதென்றே நாம் சொலலுவோம். அதிகாரத்திலேயே பழக்க மிகுந்தவரான போதிலும் இரண்டு ஸமஸ்தானத்தின் பரிபாலனத்தின் முக்கிய பதவை வகித்திருந்தவராதலாலும், கோவாபரேடிவ் ரிஜிஸ்டிராராக உத்தியோகஸ்தரல்லாத படித்தவர்கள் பாமரர்கள், இவர்களுடன் பல வருஷங்களில் பழகி அவர்கள் நோக்கங்களையும், எண்ணங்களையு மறிந்திருப்பவராதலாலும், உத்தியோகம் வகித்தவரென்பதினால் சொல்லக்கூடிய குறை அவர் விஷயத்தில் இருப்பதற்கிடமில்லை. இதர உத்தியோகஸ்தரல்லாத பிரமுகர்கள் நியமனம் பெறக்கூடியவர்களைவிட ஜனங்களிடம் இவருக்கு அனுதாபம் ஒருவிதத்திலும் குறைவாக இராதென்றே நாம் திடமாய் நம்பியிருக்கிறோம். அவர்களைவிட நிர்வாக அனுபோகம் உண்டென்பதை நாம் சொல்லத் தேவையில்லை. ஆதலால், பார்லிமென்டார் சீர்திருத்தத்தில் இந்தியருக்குப் பிரதிநிதியாகவிருக்கவும் இந்தியநோக்கங்களை அறியும்பொருட்டும் இந்தியரொருவரை நிர்வாகசபைகளுக்கு நியமிக்கச் செய்திருக்கும் ஏற்பாட்டிற்கு மிஸ்டர் ராஜகோபாலாச்சாரியாருடைய நியமனம் ஒத்ததென்றுதான் நாம் கருதுகிறோம். ஸாதாரணமாய் உத்தியோகஸ்தரல்லாதவர்களே இந்தியர்களுள் இப்படிப்பட்ட பிரதிநிதி முறைமையை வகிக்கத் தகுந்தவர்களாயினும், அவர்கள் ஏதோ காரணத்தினால் உத்தியோகஸ்தர்களாகிவிட்டால் அப்படிபட்டவர்களொருவரும் இதுவரையில் செய்த நியமனங்களில் அனர்கர்களாக ஒதுக்கப்படவில்லை. அதற்காக ஜனங்கள் பக்ஷம் ஆக்ஷேபனையொன்றும் ஏற்படவுமில்லை.

### சந்தோஷ முகமன்.

இப்பெரிய பதவியையும், பொறுப்பையும் வகிக்கப்பெற்ற மிஸ்டர் ராஜகோபாலாச்சாரியாருக்கு நம்முடைய அந்தரங்க சந்தோஷத்தை அறிவிக்கக் கோருகிறோம். அவர் சில மாதங்களுக்குமுன் பிரிட்டிஷ் தேசத்திற்குச் சென்றிருந்த காலத்தில் கல்வி விஷயமாய் மிக ஆராய்ச்சி செய்திருக்கிறார். அதின் பொருட்டு ஸ்காட்லாண்டு நாட்டில் கல்வி இலாகா மந்திரியுடன் தம்முடைய மோட்டார்வண்டியில் ஊர் ஊராய்ச் சென்று எல்லாபாடசாலைகளையும், பிரதமகல்வி ஸ்தாபனங்களையும் பார்வையிட்டு அவைகளின் அமைப்பையும் நடப்பையும்பற்றி பல விஷயங்களறிந்து நமது ராஜதானியின்பொருட்டு அவ்விஷயஞானத்தை உபயோகித்து, அதின் தாழ்ந்த ஸ்திதியை சீர்படுத்தக் கொண்டிருக்கும்எண்ணத்திற்கிணங்ககல்வி இலாக்கா நிர்வாகத்தை அவர் வகிக்கப் போவதாகச் சொல்லப்படுகிற வார்த்தை நிஜமாகிவிடுமென்று நம்புகிறோம். அப்படிக் கல்வி யபிவிருத்தியில் அவர் கொள்ளப்போகும் பொறுப்பில் இந்நாட்டின் தேசபாஷைகளின் நிலைமையும், அவைகள் மூலமாய் ஜனங்களுக்குக் கிட்ட வேண்டிய வித்தியாபிவிருத்தியும் முக்கியமானவையென்டதை இப்பத்திரிகையில் நாம் முதலிலேயே குறிப்பிடலானோம். மிஸ்டர் ராஜகோபாலாச்சாரியார் இந்த நிர்வாக பதவியினின்றும், தேசத்தின் க்ஷேமத்தையும் முற்போக்கையும் நன்கு கவனித்து பலன்களுண்டாகச் செய்வாரென்று பூரணமாக நம்புகிறோம்."

## THE USE OF TOYS IN THE EDUCATION OF CHILDREN-II.

## குழந்தைகளும் விளையாட்டுக் கருவிகளும்-II.

(தைமீ சஞ்சிகையின் 300-ம் பக்கத்தொடர்ச்சி.)

விளையாட்டுக் கருவிகள் வித்யாப்பியாசத்திற்கு இன்றியமையாதன வென்று சொன்னோம். அவைகளையுபயோகிப்பதினால் குழந்தைகளுக்குண்டாகும் சந்தோஷத்தையும் மனோவிர்த்தியையும் நாம் நோட்டமிட்டு அறிந்து கொள்ளவேண்டும். சிறு குழந்தைகளிடத்தில் அவர்கள் மனதுக்கிசைந்த பொருள் ஒன்றைக்கொடுத்தால் ஒரு நிமிஷம் அதை வாங்கிக் களிப்புடன் பார்த்துவிட்டு அப்புறம் எறிந்து விடுவதைக்காணலாம். கொஞ்சகாலம்சென்று விளையாட்டுப்பருவம் வந்த குழந்தைகளிடத்தில் ஒரு பொம்மையைக்கொடுத்தால் அதை அவர்கள் ஆவலோடு வாங்கிக் கொள்வதோடு "அது எனது, எனது" என்று சொல்லிக் கொண்டாடுகிறதைப் பார்க்கலாம். பொம்மைகளால் குழந்தைகளுக்கு முதல் முதல் 'சொத்து' என்கிற எண்ணம் உண்டாகிறது. "எனது, எனது" என்று சொல்லும் பொழுது முதல் முதல் "சொந்தம்" என்கிற எண்ணம் உதிப்பதில்லை; 'சொத்து' என்கிற எண்ணம் உதித்தபின் "சொந்தம்" என்கிற எண்ணம் உதிக்கிறது. முதலில் "எனது, எனது" என்று சொல்லிக்கொள்வதோடு திருப்தியாகவிருக்கும் குழந்தை கொஞ்சகாலம் சென்றால் அந்தமட்டோடு திருப்தியடையாமல் அதில் 'சொந்தம்' பாராட்ட விரும்பும். அப்பொழுது 'என்பொம்மை' என்று அது சொல்வதைப்பிறர் ஒப்புக்கொண்டால் அதோடு திருப்தியடைகிறதில்லை, தன் பொம்மையைத் தான் வைத்துக்கொண்டிருக்க வேண்டும்; தன்னனுமதியின்றி வேறொருவர் தொடக்கூடாது; தன்னதென்று அதைத்தனியாக வைத்துக்கொள்ள வேண்டும்; என்று, சொந்தம் பாராட்டுவதற்குரிய எண்ணங்களெல்லாம் ஒன்றின் பின்னொன்றாக உதிக்கின்றன. பொம்மை அல்லது சொப்புக் கொடுத்தவுடன் புதிய கொடை யொன்று கிடைத்தது என்கிற சந்தோஷம் சொற்ப காலமிருந்து போய்விடுகிறது. ஆனால் அதுமுதல் குழந்தை உலகானுபவங்களை அறிந்தனுபவிக்கத் தொடங்குகிறது. கொடுத்த கொடை ஒரு மரப்பாய்ச்சியல்லது பொம்மையானால் அதைக் குழந்தையென்று பாவித்துப் பாராட்டித் தாலாட்டிப் பால் போட்டி, எண்ணெய்தேய்த்து இன்னும் குழந்தைக்குச் செய்யும் காரியங்களில் தான் அறிந்ததெல்லாம் அதனிடத்தில் காட்டி அனுபவம் பெறுகிறது. ஒரு குதிரை கொடுத்தால் "ஹைஹை" யென்று ஓட்டி விளையாடுகிறது. ஒருநாய்க்குட்டி கொடித்தால் "தோ, தோ" என்று கூப்பிட்டு விளையாடுகிறது. இரண்டு மூன்று பலகைகளைக் கொண்டு ஒரு உள்ளுத்தடுத்துக் கொடுத்தால், அதை முன்னிட்டு அப்பா, அம்மா, குழந்தை, அடுப்பு, சமையல், சாப்பாடு முதலிய விளையாட்டுகள் விளையாடும். இப்படி பொம்மைகள், சொப்புகள் மூலமாகவே குழந்தைகள் முதல் முதல் லோகானுபவங்களை யுணர்ந்து அனுபவிக்கத் தொடங்குகிறார்கள். ஆகையால் குழந்தைகளுக்கு விளையாட்டுக் கருவிகளும் பொம்மைகளும், படங்களும் எவ்வளவுக் கெவ்வளவு கொடுக்கிறோமோ, அவ்வளவுக்கு அவ்வளவு அவர்களுக்குச் சந்தோஷம் அதிகமாவதோடு அறிவும் ஞானமும் அனுபவபூர்வமாக அதிகமாய் வளர்கிறது. இதுவே குழந்தைகளின் பள்ளிக்கூடப் படிப்புக்கு அஸ்திபாரமாக ஏற்படுகிறது. குழந்தைகளின் மனோவிர்த்திக்குக் காரணமான இவ்விஷயத்தில் பெற்றோர் எவ்வளவு சிரத்தையெடுத்துக் கொள்ளவேண்டும்! இருந்தும் நம்மவர்களில் எத்தனைபேர்கள் குழந்தைகள் விளையாடுவதைக் கண்டால் "என்னவோ சிறிதுகள் விளையாடிக் கொண்

டிருக்கின்றன" வென்று அலக்ஷியம் பாராட்டி அசிரத்தையாயிருக்கிறார்கள். ஐரோப்பா, அமெரிக்கா தேசங்களில் குழந்தைகளின் மாதிரிகளை யறித்து கொள்ள வேண்டி, மகா நிபுணர்களெல்லாரும் எவ்வளவோ பிரயாசையெடுத்துக் கொண்டு வருகிறார்கள். உபாத்தியாயர்கள், பெற்றோர்களெல்லாரும், இதுவிஷயமாய் சங்கங்கள் கூடி ஒருவருக்கொருவர் ஒத்தாசைசெய்து கொண்டுவருகிறார்கள்; குழந்தைகள் சுபாவங்களை யறிந்து அவர்களைச் சரியாக நடத்தி அவர்கள் தேகமனோவிர்த்தி ஆத்மவிர்த்திக் கனுகூலமானபடி நடந்து வளர்த்துவர உதவி செய்யும்பொருட்டு இதற்கென்று பிரத்தியேகமான பத்திரிகைகள் எத்தனை பிரசுரிக்கப் பட்டுவருகின்றன. நம்மவர்கள் இது விஷயத்தில் அக்கறையற்று அசிரத்தையாக விருப்பதால் நமதுதேசப் பொதுவிர்த்திக்குண்டாம் இடையூறு இவ்வளவவ்வளவல்ல. ஆகையால் பெற்றோராயுள்ள எல்லோரும் இது விஷயத்தில் தங்கள் கடமையையுணர்ந்து அதைச் சரிவர நிறைவேற்றிவர முயற்சிக்கவேண்டும். பாலபோதகர்களாயிருக்கும் உபாத்தியாயர்களும், பிரதம பாடசாலை உபாத்தியாயர்களும் தங்கள் பொறுப்பை யறிந்து அதற்குச்சரியாக நடந்துகொள்ள யத்தனிக்கவேண்டும். இத்தேசத்தில் பிரதமபாடசாலை உபாத்தியாயர்கள் சம்பளம் மிகக்குறைவாக இருப்பதால் அதிகப் படிப்பும் புத்திசாமர்த்தியமுமுள்ளவர்கள் அவ்வேலைக்குக்கிடைப்பது துர்லபமாகவிருக்கிறது. இருப்பவர்களில் புத்திசாலிகளாயுள்ளவர்கள் வயிற்றுப்பாடு பெரும்பாடாக விருப்பதால், இது விஷயத்தில் வேண்டியமட்டும் படித்து நூதனமுறைகளையும் விஷயங்களையுமறிந்து தங்கள் ஞானத்தை விர்த்திசெய்துகொள்ள வழியற்று தங்கள் தொழிலில் உற்சாகமற்றவர்களாக விருக்கிறார்கள். இக்குறைகளெல்லாமிருந்தாலும், நாமெல்லாரும் நமது குறைகளுக்குமேல் எழுந்து விர்த்திவழியை நாடவேண்டியது அவசியமாயிருக்கிறபடியால் புத்திசாலிகளான பெற்றோர்களும், உபாத்தியாயர்களும், இது விஷயத்தில் மிக்க கவனம் செலுத்திப் பிள்ளைகளை வளர்க்கும் வழியை நன்றாயறிந்துகொள்ள முயற்சிப்பார்களென்று நம்புகிறோம்.

## SOCIAL ESSAY ON FRIENDSHIP.

### ஸமஷ்டி ஸாதனம் : நட்பு.

Dr. Ames of Chicago in one of his celebrated lectures, emphasizes the fact that, beyond all fear of contradiction, Social Service generates religious feeling and conviction. "Emotion accompanies voluntary activity. Feeling and sympathy are generated by conduct. To share and to take a part in the great human activities, to help in charities, to serve our neighbours, to support the educational and religious movements,—when we do all this, we experience the love of God in our lives."

And this is true. Unselfish service is more convincing, than all doctrinal controversy! And friendship is its natural fruit ripened by season and service.

The ideal of Social Service is full of practical deeds and of sweet reasonableness. And this ideal appeals to the young and the strong; it is attracting a better type of leader to the cause of Righteousness in all the world.

இது ஒருவரிடத்துக் கொள்ளும் சிநேகம். சிநேகமென்றாலோ ஒரே வழியாய் மூச்சுவிடுவது என்று அர்த்தம். அதாவது இரண்டு உடலுக்கு ஒரு உயிர்போல் ஒத்துவாழ்தல். இத்தகைய நட்பானது ஒரு மனிதனுக்கு பிறவிக்குணமாக உண்டாகக் கூடியதாயிருக்கிறது. ஆயினும் சத்சங்கப் பழக்கத்தாலுண்டாகக் கூடியதல்லவென்றும், ஒருவன் தானாக ஆக்கிக்கொள்ளக் கூடியதல்லவென்றும் சொல்லக்கூடியதன்று. இவ்விதம் பாராட்டப்படும் நட்பானது மனப்பூர்த்தியாய்ப் பாராட்டப்பட்டாலன்றி அது நட்பாகாது. "முகநக நட்பது நட்பன்று, நெஞ்சத் தகநக நட்பது நட்பு" என்றபடி அகமறிந்து நட்புச்செய்த நண்பர்கள் ஒருவருக்கொருவர் ஆவியென விளங்குவார்கள். அவர்களில் ஒருவன் இடுக்கணுறுவானாயின் மற்றவன் சகியான் எப்பாடு பட்டாவது அவன் இடுக்கணைக் களைவான். ஒருவனுடைய வஸ்திரமானது நெகிழ்ந்து விழுங்கால் எப்படி அவனுடைய கையானது மனதினுங் கடியதாய்ச் சென்று உடையைத் தடுத்து மானத்தைக் காக்குமோ அவ்வண்ணமே, தன் நண்பன் எண்ணுவதற்கு முன்னே, "உடுக்கை

இழந்தவன் கைபோல" அவன் இடுக்கணைக் களைவான். இவ்விதம் எவன் தன் மித்திர னுடைய ஆபத்தை நீக்கியும், நீக்கவியலாத காலத்திலவனுடன் அத்துன்பத்தை யனுபவித்தும், தனக்குச் சம்பத்து வந்தாலதை யவனுடன் அனுபவித்தும் வருகிறானோ அவனே நண்பர்களில் உத்தமனெனப்படுவான்.

அத்தகைய நேசர்களுடைய பொருள்களனைத்தும் பொதுவேயாமென்பதில் சந்தேகமில்லை. அவர்களில் ஒருவருக்கு நேரிடும் சுக துக்கம் மற்றவருடையனவே. அவர்களுக்குள் "நீ, நான்" என்ற வேற்றுமை கிடையாது. இவ்வித நண்பர்கள் ஒருவரைவிட் டொருவர் பிரிந்தால், பிரிக்கப்பட்ட கன்றையும், பசுவையும்போற் கதறுவார்கள். இவர்களில் ஒருவர் இறந்தால் மற்றவர் உயிர் தரியார். தரித்திருப்பினும் உயிரற்ற உடல்போலவே செயலற்றுழல்வர். அதாவது மனதுங் குணமும் ஒருமைப்பட்டு சிநேகித்த நேசர்களுக்குள் வேற்றுமையே கிடையாது. இதற்கு நமது நூல்களிலிருந்து பல உதாரணங்கள் கூறலாம். பத்மாவதி என்ற பதிவிரதை தன் கணவர் ஜெயதேவ் இறந்தாரென்று கேள்விப்பட்டவுடன் உயிர் துறந்தாள். தன் நகரத்தை விட்டகன்ற காளிதாசரைத் தேடிக்கொண்டு பல தேசங்களுக்கு உருமாறிச் சென்று அவரைக்கண்டு பிடிக்கவேண்டுமென்ற அபீஷ்டத்தால் போஜராஜர், எதிர்ப்பட்ட யாவரிடத்திலும் வழக்கமாகக் கூறுகிறபடி, தன்முன் வந்தவர் காளிதாசரென்றுணராமல், காளிதாசர் இறந்துவெகுநாளாயினவே என்றார். அவ்வாசகம் காளிதாசர் செவிக்கு காச்சியலோகநீராகப்பட, பதைபதைத்து, தாரா நகரம் நிராதாரமாய்த் தத்தளிக்கவும், சரஸ்வதி கொள் கொம்பற்ற கொடிபோல் வருந்தவும், பண்டிதர்களை ஒருங்கே நல்குரவு பற்றவும் போஜன் இறந்தானே! என்னுங் கருத்துள்ள,—

"அங்யதாரா நிராதாரா நிராலம்பா சரஸ்வதீ,
பண்டிதா கண்டிதா சர்வே போஜ ராஜாதி
வங்கதே."

என்ற சுலோகத்தைச் சொன்னார். உடனே அரசர் இறந்து கீழேவிழுந்தார். அதனைக் கண்டதும் காளிதாசர் முன்னிலும் பதின்மடங்கு நடுநடுங்கி அவரை அரசரென உணர்ந்து, என்னைக் கண்டு பிடிக்கவோ இவ்வுபாயத்தை மேற்கொண்டீரென், அவர் தேகத்தைத் தூக்கி மார்போடணைத்துக்கொண்டு முன் பாடிய சுலோகத்தை மாற்றி,—

"அங்யதாரா சதா தாரா சதாலம்பா சரஸ்வதீ,
பண்டிதா மண்டிதா சர்வே போஜராஜா
புவங்கதே."

என்று பாட அரசர் உயிர்பெற்று எழுந்து இருவரும் தழுவிக்கொண்டு தாரா நகரம் சேர்ந்தனர்.

இவ்விதம் ஒரு அரசர் ஒரு கவியைக் கண்டு பிடிக்க வேணுமென்று உருமாறி பல தேசங்களுக்கு செல்லக்காரணமென்ன? நட்பின் பலமேயன்றி மற்றொன்றுமல்ல.

இராமாயணத்தில் களங்காண் படலத்தில் இலங்கையின் மேலைக் கோட்டைவாசலில், இராவணன் இலக்ஷ்மணருடன் போராடி அபஜயப்பட்டகாலத்தில், இத்தனை சங்கடமும் இந்த விபீஷணனால் நேரிட்டதல்லவாவென்று மனமெரிந்து, விபீஷணர்மேல் ஓர் சக்தியை பிரயோகிக்க, சுக்கிரீவன் அதை தம் மார்பில் ஏற்றுக்கொள்ளும்படி அதற்கெதிரே போய் நிற்க, அதுகண்டு அங்கதன் பிதாவிற்கு அபாயம்வரப் பார்ப்பது புத்திரனுக்கு அழகோ, ஆபத்திற்கில்லாத பிள்ளை இருந்தென்ன உபயோகமென்று, அதைத் தன் மார்பிலேற்கப்போக, அவனை விலக்கி ஆஞ்சநேயர், அரசரைக்காட்டிக் கொடுப்பது அமைச்சனுக்குத் தர்மமல்லவே யென்று தம்மார்பிலேற்கப்போக, இந்தப்படி படைத்தலைவர்களும் ஒரு

வர்பின் ஒருவராக தங்கள் மார்பிலேற்கப் போவதையறிந்து, நீங்கள் யாரும் இறக்க வேண்டியதில்லை, அதை நான் கண்டிக்கிறேன், விலகியிருங்களென்று உபாயமாகச் சொல்லி அனைவரையுந் தடுத்து கடைசியில் அதை இலக்ஷுமணன் தன் மார்பிலேற்றுக்கொண்டு இறந்து, அனுமன் உதவியால் உயிர்பெற்றெழுந்து, இராமரிடம் வந்து சேவித்து நிற்கையில் விபீஷணர் இச்சங்கதியை இராமரிடம் விண்ணப்பஞ் செய்தார். அப்பொழுது,—

"புறவொன்றின் பொருட்டால் யாக்கை
புண்ணுறவரிந்த புத்தேள்,
அறவனு கின்னையை நிகர்க்கில
னப்பானின்ற,
பிறவினி யுரைப்ப தென்னே
பேருளாள ரென்பார்,
கறவையுங் கன்றும் போல்வார்
தமக்கிடர் காண்பாராயின்."

என்று இராமர் சொன்னதாக கம்பர் கூறியிருக்கிறார். இப்படி தமது நண்பர்களுக்கு ஆபத்து நேர்ந்தால், தனது உயிரையும் திரணமாக நினைத்து ஆப்தர்களைக் காப்பதும் நட்பே.

ஐரோப்பா கண்டத்தில் கிரீஸ் தேசத்தில் நடந்த ஒரு உதாரணத்தையும் கீழே கூறுவோம். எதென்ஸ் என்னும் நகரத்தில் நெடு நாட்களுக்கு முன் ஒரு பள்ளிக்கூடத்தில் அல்காண்டர், செப்டிமியஸ் என்ற இரு பிள்ளைகள் படித்துவந்தார்கள். அவர்களில் ஒருவன் சிறந்த தார்க்கிகன்; மற்றவன் தேர்ந்த பிரசங்கி. இவர்களில் ஒருவர் திறமையைப்பற்றி மற்றவருக்கிருந்த வியப்பாலும், குணவொற்றுமையாலும், அன்பினாலும் நட்பு மிகுந்தது. கல்வி, செல்வம், வயது முதலியவைகளில் இருவரும் சமானமா யிருந்தார்கள். இவர்களில் ஒருவருக்கு மற்றவர் எவ்விதமாயாவது கெடுதலுண்டாகும்படி நடந்தாலும், செய்தாலும் அவைகளைப் பாராட்டாமல், சகோதர அன்பு பூண்டு நடந்துவந்தார்கள். ஒருவன் மற்றவனைப்பிரிந்து தனித்திருக்க மனமிசையான். ஒரு அற்பப் பொருளாயிருந்தாலும், அல்லது கோடி பவுன் பெறும்படியான பொருளாயிருந்தாலும், ஒருவன் மற்றவனுக்கு மறைக்க எண்ணங்கொள்ளான். இவ்வித மிவர்கள் நட்பானது வளர்ந்து, தழைத்து வருகையில் அல்காண்டரென்பவன் கல்வி பயிலும் காலங் கழித்து உலக வியவகாரத்தில் புக எண்ணவே, அதற்கு அனுகூலமாக இபேஷியா என்ற சகல லக்ஷணங்களுமமைந்த ஓர் யவ்வனமாதின் பேரில் காதல்கொண்டான். அவளும், இவனுடைய அன்புக்கும், காதலுக்கு மிசைந்தனள். இவ்விருவருக்கும் விவாகத்திற்கு முகூர்த்தம் நிச்சயித்து அதற்குவேண்டிய காரியங்களும் தயாராக்கப்பட்டன. அந்த நாளை மணமகளும் மகனும் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். இப்படியிருக்கும்பொழுது தன்னுடைய மனமகிழ்ச்சியின் மேலீட்டாலோ, தன்னுயிர்த் தோழனாகிய செப்டிமியஸ் இல்லாமல் தான்மட்டும் மனதார இன்பமனுபவிக்க இயலாமலோ, தன் காதலியைத் தன்னுயிர்த் தோழனுக்குக் காட்டவேண்டுமென்ற எண்ணத்தாலோ, செப்டிமியஸை வரவழைத்து, மனதிற்கிசைந்த காதலியையும், ஒப்புயர்வற்ற தோழனையும் இவ்வுலகத்தில் நாமே யடைந்தோமென்ற பெருமை தோற்ற, தன் மித்திரனுக்கு காதலியைக் காட்டப் பின்வாங்கவில்லை. அந்தோ! இதுவே இருவருக்கும் ஆபத்தாய் முடிந்தது. பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்தவாறுபோல் செப்டிமியஸ் இபேஷியாவைப் பார்த்தானே இல்லையோ, தன்னை யறியாது அவளிடத்தில் காமங்கொண்டான். காமத்திற்குங் கண்ணுண்டோ? ஐயோ! நமது தோழன் மனைவியாயிற்றே, யவள்பேரில் நாம் காமுறல் அநியாயமும் அவிவேகமுமன்றோ," என்று தன்னுலானமட்டும் தன்னுளோங்கி வளர்ந்த காமத்தீயைக் கடிந்து

கொண்டான். மதியற்ற மானிட ஜன்மந்தானே! அடக்கமுடியவில்லை. அந்த மடந்தையின்முன் நில்லாது செல்வோமென்று தன்னறைக்குட் சென்ருன். சென்றும் மன்மதனுடைய கணைகளுக்கு சகிக்கமாட்டாமல் வருந்தினன். காமசுரம் காய்ந்தது. வைத்தியர்கள் இந்நோய் ஔஷதப்பிரயோகத்தால் நீங்கத் தக்கதல்லவென்று தீர்மானித்தார்கள்.

இதைக் கண்ட அல்காண்டரோ, அவனிடத்துள்ள அன்பு மிகுதியால், அவன் பக்கத்திலிருந்து பணிவிடைகள் செய்ததன்றி, தனது நண்பனுக்கு இவ்வியாதி எப்பொழுது, எவ்வாறு தீருமென்று கிலேசமுற்றவனா யிருந்தான். தன் நண்பனுக்கு செய்யு மூழியத்தில் தன் காதலியாகிய இபேஷியாவையும் சேர்த்துக்கொண்டான். இபேஷியா பக்கத்திலிருந்து பணிவிடை செய்து வந்தகாலத்தில் உற்று நோக்கி வந்த வைத்தியர்கள், நோய்க்குக் காரணமிவளே யென்று தெரிந்துகொண்டு அல்காண்டரிடம் சொன்னுர்கள். இதைக் கேட்டு ஆச்சரியப்பட்டவனாய், இது வாஸ்தவமென்பதை சாகக்கிடக்கும் தன் நேசனிடமிருந்து வெகு கஷ்டத்தின்மேல் தெரிந்துக்கொண்டான். என்ன செய்வான் அல்காண்டர்! கொடுப்பானா தான் காமுற்ற காதலியை? இழப்பானா நெடுநாளாய் சிநேகித்த செப்டிமியஸை? தனக்கு இபேஷியாவிடத்தில் காதல் கரைபுரண்டிருப்பதையும், தனது நண்பன் அவளிடத்து கொண்ட காமத்தால் சாகக் கிடப்பதையும் கண்டு, கவலையுற்றவனாய் வெகு நேரம் வரையில் தத்தளித்து, கடைசியில் தனக்கும் இபேஷியாவுக்கும் கலியாணமாகாமலிருப்பதைப்பற்றிச் சந்தோஷித்து, அற்பகாலத்திற்கு முன் காமுற்ற தணிகையினும், வெகு காலத்திற்கு முன்னிருந்து நண்பனாயிருக்கும் தோழனே சிறந்தவனென்ற தீர்மானத்துடன், சுய நன்மையைக் கருதாது, குலம், குணம், அழகு முதலியவைகளால் ஒப்புயர்வற்ற இபேஷியாவை தனது மித்திரனுடைய உயிராக்கி விட்டான். அல்காண்டரின் சம்மதத்தின் பேரில் அவ்விருவருக்கும் இரகசியமாய் விவாகம் நடந்துவிட்டது. கொஞ்சகாலத்திற்கெல்லாம் செப்டிமியஸ் தன்னூராகிய ரோமேனியாவிற்கு செல்ல, அங்கு அவனுடைய கல்வித்திறமையாலும், சாமர்த்தியத்தாலும், நியாயாதிபதியாகினன்.

(இன்னும் வரும்.)

## THE BOYHOOD OF GREAT MEN OF THE WEST.

### II. Dr. Johnson:

## மேற்றிசை மேதையோர் பாலிய சரிதை.

### II. டாக்டர் ஜான்சன்.

தைஸ் சஞ்சிகையில் 307-ம் பக்கம் தொடர்ச்சி.

இங்ஙனே ஜான்சன் இரண்டாண்டு இருந்துகொண்டு சிறுபிள்ளைகளுக்கு பாடம் சொல்வதில் திறமைபெற்றுர். தனக்கும் ஆசிரியருக்கும் மனமொவ்வாமையாற்பிணங்கித் தன்தேயமடைந்தனர். வீட்டிலிருந்துகொண்டு கல்வியைக் கைசோர விடாமற் கற்றுணர்ந்து வருவானாயினர். இச்செய்தி தந்தை யறியானாகி மகனைப்பார்த்து வீண்காலம் போக்குகிறுயென்றும், சோம்பற்றன மேலிட்டிருக்கிறதெனவும் கண்டித்தார். ஜான்சனே பண்டைப்புலவர்கள் வெளியிட்டுள்ள பலவிடயங்கள் பதிந்த காப்பியங்களை கற்றுத் தன் மனக்களஞ்சியத்தை நிரப்பிக்கொண்டு வருவாராயினர். "ஷராப்ஷயர்" மாகாணத்தில் உள்ள ஒரு உயர்தர கலாசாலைக்காவது அனுப்பலாமென்ருலோ தனக்கு சக்தியில்லையே என்று தகப்பனர் தபித்துக்கொண்டிருக்கையில் அந்நாட்டில் உள்ள சீரியர் ஒருவர் பாலகன் ஜான்சனைக் கண்ணுற்றுப் பிரியங்கொண்டு கல்வியைக் கசடறக் கற்றுணர 'ஆக்ஸ்போர்ட்' (Oxford கலாசாலைக்குப் போக பொருள் உதவி புரிவதாக வாக்களிக்கவே 1728ஞு அக்டோபர் மாதம் இறுதியில் அக்கலாசாலைக்கனுப்ப அவர் தகப்பனர் உவகை பூத்தார். ஜான்சன் ஊரைவிட்டுப் புறப்பட்டுப்போகிற சங்கதி கேள்வியுற்று ஓர் பெண் ஆசிரியர் தன்னிடத்தில் சிறிதுகாலம் மாணவனாயிருந்த காரணம் பற்றி அவருக்கு ஆசி கூறி அனுப்பக்கருதி கையிற் சுவைப் பணிகாரம் ஒன்றை எடுத்துக்கொண்டு ஜான்சன் இல்லத்தை வந்தடைந்தனள். அப்பணிகாரத்தை அக்குழந்தை கையிற் கொடுக்க அவர் அதை அன்புடனேற்றுக் கொண்டு

அருகாமையில் நிற்க, பிதாவை நோக்கி என்னிடம் படித்த பிள்ளைகளில் இவன் மகா புத்திமானென உரைத்து ஆசீர்வதித்தனள். இதை ஜான்சனும் பிற்காலத்தில் மறக்காமல் புகழ்ந்துபேசி அக்கலைமாதை வெகுவாய்க் கொண்டாடினார். தந்தையும் தன்மகன் கல்வி கேள்விகளிற் சிறந்தவனென முன்னமே சிறிதளவு தெரிந்தவனாதலின் இன்னும் பதின்மடங்கு மனம் பூரித்தனன். தன் மகனை யழைத்துக்கொண்டு அக்டோபர் மாதம் 31-ம் தேதியன்று 'ஆக்ஸ்போர்ட்' கலாசாலையைக் குறுகி நடுவு நிலைமை (Commoner) வாய்ந்த மாணவர்கள் பயிலும் 'பெம்ப்ரோக்' (Pembroke) காலேஜில் சேர்த்தனர். இவர் ஓராசிரியர்பால் விடுத்து இவரது வித்யாவிஷயத்தை கவனித்துவர ஏற்பாடுசெய்ய அதிகப் பிரயாசைப்பட்டார். தகப்பனார் இவ்வூருக்கு வந்த அன்று சாயங்காலமே கலாசாலைக்கேகி அங்ஙனே கூடியிராநின்ற கற்றோர் குழாத்தின் முன்னிலையிற் கூசாமற் தன் மகன் கல்வி கேள்விகளிற் றிறமையுடையவனென செருக்குற்றோதினன். அவர்கள் இப்பாலகனது நவீனநடை உடைபாவனைகளைக் கண்ணுற்று சித்தங்கலங்கி சும்மாவிருந்தனர். அப்போது ஜான்சன் உரையாட நேரிட்டபோது தன் கல்வித் திறமையை ஒருவாறு காட்டக்கருதி தானே கசடறக்கற்றவைகளுட் சிலமேற்கோள்களடங்கிய அருமை வசனங்களைக் கழறலுற்றார். ஆசிரியரையே நாடி மெய்வருந்திப்பயில வேண்டுமென்றெண்ணம் கொண்டவரல்லவாதலின் ஜான்சன் ஆசிரியர்பால் கற்றுக்கொண்டவை அற்பமெனவே கொள்ளல்வேண்டும். சேர்ந்த முதல்நாள் பள்ளிக்குக் கிரமமாய்ச் சென்று 4 நாள் போகாமலே வீட்டில் நின்றுவிட்டார். ஆறும் நாள் வந்தபோது ஆசிரியர் ஏன் வரவில்லையென்று வினவ அதற்குத் தான் சறுக்கி விளையாட தேவாலயத்திற்கருகே ஒருமைதானத்திற்குச் சென்றிருந்ததாக விடைபகர்ந்தனர். இவ்வாறெடுத்துரைப்பது நன்மாணாக்கன் இயல்பல்லவென அப்பருவத்தே தனக்குப் புலப்படவில்லையென்றும் ஆனால் தனக்கு ஆசிரியர்பால் விஸ்வாசம் எள்ளளவும் மாறவில்லை யென்றும் பிற்காலம் நவின்றனர். இவர் வாசிக்கும் 'பெம்பரோக்' காலேஜில் நவம்பர் மாதம் 5-ம் தேதி ஒரு விசேடநாள் கொண்டாடப்பட்டு வந்தமையின் ஜான்சனுக்கும் மற்றப் பிள்ளைகளுக்குப் போலவே வீட்டு அப்பியாசத்திற்கு "வெடிமருந்து வைக்கச் செய்தோர் கள்ளயூகம்" (Gunpowder Plot) என்கிற சரித்திர விஷயத்தைப் பற்றி எழுதிக்கொண்டு வரும்படியாய் ஆசிரியர் கட்டளையிட அவ்வாறுசெய்ய சற்றும் கவனியாமல் தான் சொந்தமாய் கட்டிய சில கவிகளைக் காட்டி மன்னிக்கும்படி கேட்டுக்கொண்டனர். இவற்றைக்கண்டு ஆசிரியர் ஆனந்தங்கொண்டு 'போப்' (Pope) என்ற மகாகவிபாடிய 'மேச்சியா' (Messiah) என்னும் நூலை இலத்தேன் பாஷையில் மொழி பெயர்த்து கிருஸ்துப் பண்டிகைத் திருவிழாவன்று கொண்டுவரும்படி திட்டஞ்செய்தார். கலாசாலையிற் கையும் புஸ்தகமுமாயிருந்த காலையிலேயே கவிசெய்யும் திறமை வாய்க்கப்பெற்றார். தன் சுதேசமாகிய 'இலிச்பீல்டில்' இருந்தகாலத்து அந்நாட்டிலுள்ள சில சீமாட்டிகள் சேர்ந்து "துயரமுற்ற தாய்" (The Distressed Mother) என்ற ஓர் நாடகத்தை ஆட எண்ணி ஜான்சனை அதற்கு ஒரு 'முடிவுரை' (Epilogue) எழுதமன்றாட அவருமதற்கிசைந்து வெகு அழகாய் எழுதிமுடித்தார். இவர் கீர்த்தி எங்கும் பரவ இடமுண்டாய் தான் படித்த சர்வகலாசாலைவரை எட்டிற்று. வெகுகாலம் இவரை 'மனோன்மத்தம்' (Hypochondria) என்ற கடுநோய் பின்றொடர்ந்து வந்தமையின் அதை நிவிர்த்திக்கக்கருதி வைகறையில் வெகு தொலை வெளியே உலாவப் போவதும், இன்னும் இதைப்போன்ற தனக்குப் பிறரால் சொல்லப்பட்ட சிகிச்சைகளைச் செய்தும் யாதொரு பயன்படவில்லை. மனக்கவலை எய்

தினவராய் ஒரு ஆயுள்வேத பண்டிதனைச் சார்ந்து தன் நோயின் கூறுபாடுகளையும், வெங்குறைகளையும் இலத்தீன் பாஷையில் வர்ணித்து வரைந்து காட்டினர். இதில் உள்ள ஆராய்ச்சித் திறமையும், சொல்லலங்காரத்தையும் கண்டு வியப்புற்று அவ்வாயுள்வேதபண்டிதன் தன் நேசர்களிடம் காட்டி மகிழ்ந்தனன். இதைக் கேள்வியுற்ற ஜான்சன் கடுஞ்சினங்கொண்டு தன் உள்மர்மத்தை வெளியிட்ட குற்றத்திற்காக அவரை மன்னிக்காமல் பலபேர் அறிய குறை கூறியும் வந்தனர். ஒன்பதாம்வயது முதற்கொண்டு தெய்வபக்தி குன்றி யாதினும் பற்றற்றவனாய் இருந்தார். ஆக்ஸ்போர்ட் (Oxford) கலாசாலைக்கு வந்த நாள் முதல் பக்திப் பிரதாபத்தைப் பற்றி தீர்க்காலோசனையில் ஆழ்ந்தவராய் இறுதியில் செய்கடமைகளில் தெய்வாராதனை தான் முக்கியமென வோர்ந்து தன்னைப் பிறர் பார்த்து அனுஷ்டிக்குமாறு அவ்வளவு ஆசாரசீலனாய் விளங்கினர். கிரீக் பாஷையைச் சிறிதளவு கற்றுணர்ந்தார். 'மானத சாஸ்திரம்' (Metaphysics) பயின்று பண்டிதனாக வேண்டுமென்ற எண்ணம் இருந்தமையின் இதை விசேஷமாய்க் கற்று வந்தார். எந்நூலை எடுத்தாலும் நான்முகம் முதல் நூலின் முடிவு வரை வாசிக்காமலே அதனில் படிந்திராநின்ற முக்கிய அம்சங்களைமாத்திரம் ஆராய்ந்தெடுக்கும் வல்லவராதலின் கல்வி கேள்விகளிற் சிறந்தவராய் பிற்காலம் இவற்றை உபயோகிக்கும் மேன்மையையும் பெற்றார். இக்காலத்தில் இவன்பால் சகிக்கவொண்ணு வறுமைநோய் அணுகிற்று. அப்போது இவரைப்பற்றி ஒரு கதை உண்டு. தினந்தோறும் தேவாலயத்தில் உபந்நியாசங்களின் கருத்தை எழுதி வாங்கிக் கொண்டுவர ஒரு போதகரிடம் போவதுண்டு. அப்போது இவர் உபயோகித்து வந்த மிதியடி பழையதாயும், தேய்ந்ததாயு மிருந்தமை பற்றி கால் விரல்கள் வெளியே விகாரமாய்த் தோன்றின. இதை அப்போதகர் ஒருநாள் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்ததை யறிந்த ஜான்சன் அவரிடம்போக மனமில்லாமல் நின்றுவிட்டார். சிலர் இவரது நல்வரவை நோக்கி மனமிரங்கி புதியமிதியடி ஒன்றை அவனுடைய உபயோகத்திற்காக வீட்டு வாசற் படியில் வைத்துவிட்டுப் போயினர். அதைக் கண்டு வெகுண்டு அதை எடுத்து வெளியே எறிந்துவிட்டார். சான்றோர் எவ்வகை மிடியாற்றுன்புறினும் நாணம் என்னும் அணிகலத்தைப் பூண்டு ஒழுகுவர். இக்கருத்து விளங்க நாயனாரும்,

"அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்
கஃதின்றேற்
பிணியன்றோ பீடுநடை"—என்றார்.

"கரம்பெழுந்து நல்கூர்ந்தா ராயினுஞ் சான்றோர்கு
குற்றங் கொண்டேறு—றுரங்கவறு [ம்பெழுந்துங்
உள்ளமெனு நாரினாற் கட்டியுள வரையாற்
செய்வர் செயற்பாலவை"—(நாலடியார்)

கல்வி ஆக்கத்தை ஆதாரவாக்கொண்டு உலகத்தில் உஜ்ஜீவிக்க முயன்றார். 'ஆக்ஸ்போர்ட்' (Oxford) கலாசாலையிற் கைப்பொருளின்மையாற் கஷ்டப்பட்டபோதிலும் கலங்கா நெஞ்சமுடையாராய் காலங்கழித்து வருவாராயினர். தனக்குப் பொருள் உதவி புரிவதாக ஏற்றுக்கொண்ட கனவானும் சொன்ன சொற்ற வறி பொழுகினமையின் படிப்பைப் பாதியிலேயேவிட்டு B.A. பட்டமின்றி 1731ல் தன் சுய தேசத்திற்குப் போகும்படி நேரிட்டது. இதனால் ஒரு தக்க அலுவலிலமர்ந்து ஊதியம் பெறவிடமில்லாமற் போயிற்று. தந்தையும் இவ்வாண்டின் இறுதியிலே கடனிறுக்க சக்தியற்றவனாய் காலஞ்செல்லவே ஜான்சன் விசனக் கடலிலாழ்ந்தனர். ஒரு வேலையில் எங்கேயாவது போய் அமரவேண்டுமென பாஸ்வர்த் (Bosworth) என்னும் ஊரிலுள்ள ஒரு பாடசாலையிற் கடையாசிரியத் தொழிலை மேற்கொண்டார். இவன் சிறிது காலந்தான் இருந்தபோதிலும் ஆராத் துயரமுற்று அகக் கிளர்ச்சியின்றி காலங்கடத்தினர். தன்றேயத்

தனும் பள்ளித்தோழனுமான ஒருவன் பர்மிங் ஹாம் (Birmingham) என்னும் நகரில் இரண வைத்தியனைப் புகழ்பெற்றிருக்கிறனெனக் கேள்வியுற்று அவனிடம் சென்றார். இங்ஙன மிருந்துழி 'வாரன்' (Warren) என்ற பிரபுவோடு அளவளாவி அவர் வேண்டுகோளின் படி "உலோபோ" என்பவரால் இயற்றிய ஆபிஸினியா ஆழியாத்திரை" (Lobo's Voyage to Abyssynia) என்ற நூலை மொழிபெயர்த்து வசன நடையில் வரைந்தனர். ஜான்சன் இயற்றிய இம்முதனூல் இலந்தன் மாநகரில் பிரசுரிக்கப்பட்டு பரவலாயிற்று. போர்டர் (Porter) என்ற வேறொரு கனவானை யடுத்து அவர் காலஞ்சென்றதன்மேல் அவருடைய தாரத்தை 1736-ம் ஆண்டில் புனர்விவாகம் செய்துகொண்டு தன் சொந்தத்தில் கல்விக் கழகம் ஒன்றை இலிச்பீல்டில் (Lichfield) ஸ்தாபித்தார். இது சரிவர நடந்தேறிவராமையின் இவ்வூரைவிட்டு அடுத்த ஆண்டு 1737-ல் இலந்தன்மா நகருக்குப்போந்து அங்ஙனம் அதிக பிரசித்தமாய் பிரசுரமாகிவரும் சஜ்ஜன சஞ்சிகை (Gentleman's Magazine) என்ற பத்திரிகைக்கு பல விஷயங்களைப்பற்றி எழுதி வருவாராயினர். அக்காலத்தில் உள்ளோர் அவற்றைப்படித்து களிப்புற்று மிகக் கொண்டாடியதால் அவருடைய பெயர் எங்கும் பரவலாயிற்று. இதனைக் கேள்வியுற்றுத் தன் முதுமைப் பருவமணுகுமளவும் கிரந்த கர்த்தாவாகவே இருந்து காலக்ஷேபஞ் செய்யக்கருதினர். 'புலவர் சரித்திரம்' (Lives of the Poets) என்ற ஓரு பிரபந்தத்தை எழுதி முடித்தார். இதில் புலவர்களின் வரலாற்றுடன் முக்கியமாய் அவர்களுடைய குறை குணங்களை எடுத்து விளக்கினமையின் "குறை குணநூல்" என்றே கொள்ளல்வேண்டுமென தம் அபிப்பிராயத்தை வெளியிட்டுள்ளார். இந்நூலின்கண் சொல்வன்மையும், சொற்பொருளும், சொல்லலங்காரமும் காண விரும்புவோர் 'கவுலி, (Cowley) 'ட்ரையிடன்' (Dryden) 'அடிசன்' (Addison) 'போப்' (Pope) என்ற புலவர்களைப் பற்றி படித்துவர விளங்கும். அக்காலத்து இங்கிலாந்து தேயத்தரசன் 1762-ஆண்டில் இவருக்கு உபகாரச்சம்பளம் கொடுக்க உத்தரவு செய்தார். டப்லின் (Dublin) நகரத்து திரினிடி (Trinity) காலேஜ் சங்கத்தார் இவருக்கு L.L.D. பட்டம் அளித்தார்கள். இவர் 75-வயது ஜீவித்திருந்து 1784ஆண்டு டிசம்பர்மாதம் 13-ம் தேதி உயிர் துறந்து Westminister (வெஸ்ட் மினிஸ்டர்) என்ற இடுகாட்டில் அடக்கஞ் செய்யப்பட்டார். இவர் காலத்தில் இலந்தன்மாநகர் எவ்வாறாக விருந்ததுவென சற்றுவிவரிப்போம். அந்நாட்டிலுள்ளோர் கல்வியைக் கசடறக் கற்றுணர்ந்தோரையும், கவிஞர்களையும் தம் மாலியன்றளவு கைம்மாறு செய்யக்கனவினும் எண்ணாமல் காலக்ஷேபத்திற்கே கதியின்றி திக்கற்றவர்களாய் தயிக்கச் செய்ததுமன்றி ஏளனஞ் செய்தும் ஏசியும் வந்தார்கள். ஜான்சன் அக்காலத்தில் அளவளாவிய நூலாசிரியரின் நல்குறவு நவிலவொண்ணா நிலைமையில் இருந்தது. ஜான்சன் இத்தகைய வறுமையால் வருந்திப்பிழைக்க வகையற்ற காலத்தும் வன்னெஞ்சனைப் தன்னை பிற்காலத்தவர்கள் புகழ்ந்து கொண்டாடும்படியான கோட்பாடுகளைக் கைவிடாமல் காலங் கடத்திவந்தது விந்தையினும் விந்தையே. நன்னெறியைவிட்டு நழுவாமலும், நலனடைய நரர்களின் புன்னடைகளைப் போற்றாமலும் கல்வியையே பெரிதாக உன்னி உன்னதபதவியடைந்தார். கல்விகற்றதன் பயன் கசடற வழியில் நிற்றல் என்பதை உணர்த்திக் காட்டினவருள் இவர் ஒப்பற்றவரென இவர் சரிதையால் விளங்குகின்றது. நாயனாரும் நாவலர்களின் நல்விசையை நாட்டக்கருதி "உவப்பத்தலைக் கூடி யுள்ளப் பிரிதலனைத்தே புலவர் தொழில்." என்று கூறி யிருத்தலைக்காண்க: இவர் இயற்றிய முக்கிய நூல்கள்:—

1. ஆங்கில அகராதி. (English Dictionary.)
2. மானிடவீண் எண்ணம் என ஓர் அகவல். (Vanity of Human Wishes)
3. கடமைப் பிரதாபத்தை குறிக்கும் ஓர் நூல். (*Irene* a work on sense of Duty.)
4. பலவியாசங்க ளடங்கிய "ராம்ப்ளர்" Rambler என்னுமோர் நூல்.
5. தத்துவத்தை விளக்கும் Rasselas கதை.
6. புலவர்சரித்திரம் (Lives of the Poets.)

(முற்றிற்று.)

## "HAIL, MOTHER! I TAKE REFUGE IN THEE!"

## TRANSFUSION COLUMN:

["If a combined, honest and sustained effort is made to *transfuse* (not merely *trunslate*) good English......into Tamil, the effect will be to assist and stimulate the stuty of both languages."—Dr. G. U. Pope.]

["Here in Nature's splendid Hall, (the Magician's *Arcanam* and the Mystic's *Astral Light*)—the "audience-chamber" where Nature with maidenly modesty surrounded by Her heavenly hosts, grants ceremonial interview to those intrepid souls that have dared death and staked their very life in pursuit of Her, the undaunted wooer that will yet win Her heart and love, and claim her hand, is allowed to read the fates of all that have dared to venture further on and failed. A rueful tale of tears, vain strivings, great falls, an immense array of skeletons shorn clean of all their coverings, ghastly spectres of high hopes cherished with great powers, but shattered to pieces by faint heart or faltering faith at a moment of sudden peril or overwhelming misfortune,– these greet the advancing Initiate's eye and he is allowed plenty of time to muse on them or loiter about. Woe betide the laggard pilgrim who is attracted by the mirths and make-believe joys of the swarming host of heavens who have great powers to make or mar all that is beneath the sway of that stately Hall, but who are warned like the well-disciplined retainers they are, of a noble regnant Queen, not to intrude themselves with their attentions on any guest against his will. They are free to make the most of him who courts them or even flirts with them; and their power to charm and chain the unsteady in heart is indescribable; but the ardent virtuous wooer and true lover who cares for nought but the hand of the regnant Queen, and that for her own sake, not for the wealth or pomp of her court, has nothing to fear: and these hosts show the utmost deference to his will and their assiduous endeavours to please him form a remarkable feature of Life at this stage."—*Gleanings on the Way.*

"The truly poetic account of the writing in the inmost heaven which as it consists of inflexions according to the form of heaven can be read without instruction. In the transmission of heavenly waters, every hose fits every hydrant. Nature avenges herself speedily on the hard pedantry that would chain her waves. She is no literalist. Every thing must be taken genially and we must be at the top of our condition to understand anything rightly."—*Emerson.*

## A PRODIGAL'S REPENTANT SUPPLICATION TO HIS MOTHER.

"O mighty Mother - in silence receive thy child.
Weary, fainting - having travelled far and forsaken thee, having undertaken burdens too great to be borne -
Atlas of griefs and sorrows, well nigh borne down beneath the load -
Thy foolish child, wandering afar from thee, yet led by what divine madness? -
O mighty Mother receive.

Never again to stray.
Having circled the globe, having completed the many - thousand - year - long round which thou secretly appointedest for me -
Through what mystifications, troubles, delays, what returning on old tracks, what torments and inward suffering (thou knowest best) -
What entanglements and illusions -
O mighty Mother receive!

Outcast and friendless (for that was my necessary doom) and homeless on the verge of creation, I first knew myself - sorrow was the wall which divided me from thee.
I beheld thee afar and knew thee not; I was a prisoner and guessed not that I was in prison.
But now at thy feet - thanks, thanks!
Pouring out my soul in gratitude to thee - thy child so foolish, to Thee dear mother-
Whilst thou one by one disentanglest the loaded heavy chains which I have dragged so far -
(One by one, for not all at once will they come off, and fast and eating into my flesh are they riveted) -

At thy feet I sit and sing, knowing thou hast sworn to give me Freedom.
Ages shall my song last - for not all at once can I disburden myself;
Ages will I sing for joy - warbling in thy presence - as the birds to the risen sun;
Then at last arising Thou mother shalt take me by the hand - we will leave the earth, and thou shalt learn me to fly through Heaven.

*—Edward Carpenter.*

உ

கணேசாயநம:

## மொழிபெயர்ப்பு வித்தை: "தஞ்சமென்றடைந்தேன், தாயே, வந்தனம்!"

(அத்துவித இலக்கணம்)

"நெக்கு நெக்குள்ளுருகியுருகி நின்றுமிருந்துங்கிடந்து மெழுந்து
* நக்குமழுதுந்தொழுதும் வாழ்த்திநானாவிதத்தாற் கூத்துநவிற்றிச்
† செக்கர்போலுந் திருமேனிதிகழ நோக்கிச் சிலிர்சிலிர்த்துப்
புக்குநிற்பதென்று கொல்லோவென் பொல்லாமணியைப் புணர்ந்தே."

"ஆற்றகில்லேனடியேனரசே யவனி தலத்தைம்புலனாய
சேற்றிலழுந்தாச் சிந்தைசெய்து சிவனெம்பெருமானென்றேத்தி
யூற்றுமணற்போனெக்கு நெக்குள்ளேயுருகி யோலமிட்டுப்
போற்றிநிற்பதென்று கொல்லோவென் பொல்லாமணியைப் புணர்ந்தே."

—திருவாசகம்.

I

தாயே, மாதேவீ! தஞ்சமோ தஞ்சம்! அஞ்சேலென்றுண் டேற்றருணின்சேயை!
நாயேனின்பொன் னடிவிட்டோடியே அலைந்துதிரிந்து நலிந்துமெலிந்தேன்!
வாயேனெற்கு ஆ! வெறியேனின்சேய்வீம்பதுபூண்டு பாம்பதுபோல நெளிந்தேன்புவிமிசை!
தாயேநொந்தேன்! தாங்கேனினிப்பாரம! தூக்கொணாத்துயர்ச்சுமை தூக்கிநான்னைந்தேன்!
(CHORUS) தஞ்சந்தஞ்சந்தாயேகாத்தருள் அஞ்சலென்றுன்சேயை அரவணைத்தே!

* நகைத்தும் அழுதும்; நவில் = to learn, to imitate, to speak. கூத்துநவிற்றி-கூத்தாடி.
† செக்கர் = செம்மை; செவ்வானம்போலுந்திருமேனி-சிவன்திருமேனி. Comp. "அந்திபோலுருவானும்"

II

வர்மம்வேண்டாம் தாயேகாத்தருள் நின்னடிபிரியா தெனையணைத்தே !
கர்மவினைசூழக் காசினிமுழுவதுங் கெட்டலைந்துலைந்தது போதும்போதும் !
வர்மந்தானெத்தனை ! வாதுகளெத்தனை ! சூதுகணிறைந்த சுனைவழியெத்தனை !
தர்மந்தலைகீழாத் தவறிவிழுந்திடக் கர்மவலைப்பட்டுக் கருத்தழிந்தயர்ந்தனன் !
(CHORUS / கணாதம்) உள்ளமுணர்ந்தேயின்னருள்சாதித்துக் காத்தருள்தாயே நின்சேயை !

III

யாரொடுநோவே னார்க்கெடுத்துரைப்பனுன் பட்டதொர்பாடெலாம் பார்த்திருந்தாய் !
யாரொடுசேர்த்தியா னுரெனக்குற்றுர் ! உனையலாதெனக்கொரு கதிதானிலைகண்டாய் !
சீரொடுபொலிவாய்ச் செம்மைநலந்தரும் நினையலாதொருவரைத் தொழுதியான் துதிப்பேனோ
[சொல்லாய் !
வேரொடுமும்மலக் களையறுத்தாண்டிடு மன்னையேநின்னடி தஞ்சமென்றடைந்தேனே !
(CHORUS / கணாதம்) உள்ளமறிந்துன் திருவடிசூட்டிக் காத்தருள்தாயே நின்சேயை !

IV

நின்னடிதந்தனை யென்கலிதீர்த்தனை நினையன்றியானென்ப தில்லாதியற்றினை
பொன்னடிநீழலிற் பிணைத்தெனையிருத்திக் கணத்தினிற்பெந்தக் கயிற்றினையறுத்தனை
நின்னடிசேர்ந்தயான் பொன்னடிதொழுது முன்னைமுடிச்சுக ளவிழ்தொறும்பாடுவன்
என்னடிசோரா துன்னடிதந்தது மென்வினைதீர்ந்தது ! நின்னடிதொழுவனுன் !
(CHORUS / கணாதம்) எல்லாவுயிர்களினுள்ளத்துறையும் உனையறிந்துரைசெயு மாறுணர்த்தே !

V

போற்றுவனின்னடி புகழுவனின்பதம் வேற்றுமைதோற்றம் வேறிலையெனக்கினி !
ஊற்றுநீர்சுரக்குமா றுள்ளெழுந்தூறியூறிக் கூற்றுவனொழிந்திடக் குதூஹலம்விளைத்தனை !
போற்றுவனுன்னையான் போதப்பெருக்கினூற் புள்ளினநள்ளிருடீரப் பாடுமாபோல் !
ஆற்றுநீரோடியோடி யலைகடல்சேர்ந்துகூடிக் காற்றதுசலனந்தீறக் கரைதிரையற்றவாறே !
(CHORUS / கணாதம்) நின்னருள்போற்றியேற்றி நின்மலன்றனேயாகி நிறைவெளி யடைவனின்சேய் !

VI

அருளினி லிருந்திருந் தருள்முதிர்ந் ததிர்ந்தபோது
மருளினைப் போக்கியென்றன் மயலெலாந் தீர்த்தவென்தாய் !
தெருளினில் வளர்ந்தவுன்றன் தெள்ளமுதுண்டநற்சேய்
இருளெலாந் தாண்டியுன்னோ டருள்வெளிக்கப்பாலுள்ள—
(CHORUS / கணாதம்) அத்தனோடைக்கியமாகச் செய்வதுன் கடமையன்றோ !

தாயே வந்தனம் ! தயாநிதே வந்தனம் ! சோதியேவந்தனம், சொல்மதியே !

(ஓம் தத் ஸத்.)

C. V. S.

## "PEARLS OF FAITH."

SELECTED AND STRUNG TOGETHER EOR PARENTS AND CHILDREN TO WEAR,

*From the Sayings of St. Vemanna.*

ஆந்திரபாஷையில், பிரஹ்மக்ஞானியும், அருட்கவியுமாகிய,

வேமன்ன மகாகவி அருளிச்செய்த

ப த் ய ங் க ள்.

*(Fifth Series.)*

(கடன் படாமல் வாழ்தலே மேலாகும்.)

1. அயலாரை வஞ்சித் தவர்பொருளைக் கொண்டு
மயலார வாழன்மாண் பன்றே—புயலேயும்
கார்குழலா யென்றுங் கடனுண்டு வாழாமை
ஆருலகின் மேலா மறி.

(இ-ள்.) பிறரை வஞ்சித்து அவர் பொருளைக் கவர்ந்து மதங்கொண்டு வாழ்ந்திடுதல் பெருமையாகாது. நன் முயற்சியாற் பொருளைத்தேடிக் கடன்படாமல் வாழ்தலே பெருமையாகும்.

(துட்டர்களை யமன் சிக்ஷிப்பான்.)

2. எண்ணிறந்தார்க் கொன்றங் கெளியோரை யும்வதைத்து
மண்ணிலொரு சாண்கொள் வயிற்றுக்கா—உண்ணலிய
ஊர்தனையும் கொள்ளையிடும் வெய்யோரை யோதுநமன்
வாதனைசெய் தெற்றுமதி.

(இ-ள்.) எண்ணிறந்த ஜனங்களைக்கொன்று எளியவர்களை வதைத்துச் சாண்வயிற்றுக்காக ஊரெல்லாம் கொள்ளையிடும் கொடியபாதகர்களை நமன் பிடித்து வதைப்பான்.

(சிறிய ஏதுக்களால் பெரிய துன்பங்கள் விளையும்.)

3. செருப்பினுட் கல்லுஞ் செவியினுள் ஈயும்
உருத்தும்விழி யிற்றாசு மோதின்—இருத்தடியில்
முள்ளும்வா ழும்மனையின் மோதவரு சச்சரவும்
கொள்ளரிய வாமே குறி.

(இ-ள்.) செருப்புக்குள்ளே கல்லும் செவிக்குள் ஈயும், கண்ணுள்ளே தூசியும், காலில் முள்ளும், வீட்டில் கலகமும் எத்தனை அளவிற் சிறிதாயினும் விசேஷ துன்பத்தைத்தருவன வாகும்.

(ஈசனைமனத்தில் தியானித்தலே எல்லாப்புண்ணியங்களிலும் சிறந்தது.)

4. பன்னதிக டோறும் பரவைமுதற் றீர்த்தத்தும்
துன்னரிய காடுமலை தோறுமபோய்—கொன்னேதாம்
மெய்வருந்து வாரந்தோ விதகனை யுள்ளத்தே
பொய்யகன்று காணறியார் போந்து.

(இ-ள்.) நதிகளிலும் சமுத்திரத்திலும் இன்னம் அநேக தீர்த்தங்களிலும் சென்று ஸ்நானம் பண்ணியும் காடுமலைகளிற் சென்று திரிந்தும் வீணே வருந்துவார்கள். மனத்தில் உள்ள கடவுளை ஞானத்தாற் கண்டு வணக்கவறியார்கள்.

(ஈசனையடையும் விர்த்தியை அற்பர் அறியார்.)

5. கத்தபந்தா னோர்ந்திடுமோ கந்தமலர் வாசனையை
இத்தலத்தி லேபெருமை தாழ்மையினை—உய்த்தறிய
வல்லதோ நாய்துறவான் மாதேவன் றாள்பெறுதல்
புல்லரறி வாரோ புகல்.

(இ-ள்.) புஷ்பத்தின் வாசனையைக் கழுதை அறியுமா? பெருமை சிறுமைகளை நாய் அறியுமா? அறியாவன்றே. அதுபோல துறவறமார்க்கமாகப் பரமேசுவரன் திருவடிகளைப்பெறும் உபாயம் அற்ப குணத்தையுடைய மூடர்கள் அறிவார்களோ? அறியார்கள்.

(மனக்கோயிலே மற்றக்கோயில்களிற் சிறந்தது.)

6. குன்றிலுள்ள கல்லெல்லாங் கொண்டுபெருங் கோயில்தனை
நன்றுறவே கட்டி நடந்திடலால்—ஒன்றுபயன்
யாதுளது மெய்யி னிதயத் தொலிர்ந்திடுமே
தீதொருவு மாதிச் சிவம்

(இ-ள்.) மலைகளிலுள்ள கற்களையெல்லாம் கொண்டுவந்து அவற்றாற் பெரிய கோயில்களைக் கட்டி ஊர்தோறும் நடந்து திரிந்திடுதலாலே பயனென்ன. உண்மையாக ஆராயின் நீங்கள் தேடுகின்ற சிவம் உமது இதயகமலத்திலேயே பிரகாசித்துக்கொண்டிருக்கின்றதே. அதைவிட்டேன் வருந்துகிறீர்கள்.

(உடம்பை யலங்கரிப்போர் உண்மையறியார்.)

7. பல்பணிகள் பூண்டுதனைப் பாரோர் வியந்திடுமா
புல்லுமகிழ் வாலுள்ளம் பூரிக்கும்—நல்லுணர்வில்
ஏழையவ னந்தோதான் யாரென்று தேர்கிலனே
மாழைநிகர் கண்ணாய் மதி

(இ-ள்.) பார்த்தவர் தன்னை வியக்கும்படி அநேக விலையுயர்ந்த ஆபரணங்களைப்பூண்டு உடம்பை அலங்கரித்துக்கொண்டு நமக்குச்சமான மொருவரும் இல்லை யென்று பூரிக்கும் அறிவில்லாத மூடன் தன்னுடைய நிஜஸ்வரூபமின்னதென்று தெரியாமையாலன்றோ இப்படிச் செய்கிறான்; தெரிந்தால் மகிழ்வானோ.

(இறந்தவர்களுக்கு வருந்துவர் காரியவசமாகும்.)

8. தந்தைதாய் மாயத் தனயன் வருந்திடலும்
சிந்தைமகிழ் காதலற்குச் சேயிழைதான்—நொந்து
வருந்துதலுங் கார்ய வசமாமே தத்தம்
பொருந்துபயன் போய்விடலாற் போந்து.

(இ-ள்.) தந்தைதாயர் இறத்தலுக்காகப் புத்திரர்கள் அழுது வருந்துதலும், புருஷன் இறத்தலுக்காக மனைவி அழுது வருந்துதலும் விசனத்தாலன்று. கார்யவசத்தாலேயாகும். அவர்கள் இறத்தலினால் தாம் அவர்களாலடையக்கருதிய பிரயோசனத்தை இழந்துவிடுதலாலே தத்தம் சுவயப்பிரயோசனத்தைக் கருதியேயாகும்.

(எமனுக்கு ஒளிக்க முடியாது.)

9. மாற்றலர்தஞ் சேனையினைக் கண்டு மயங்கிடுமோர்
ஆற்றலிலாப் பேதை யகன்றிடலாம்—தோற்றுமொரு
வெம்மறலி யைக்கண்டு மெய்ந்நடுங்கி யெவ்விடத்துத்
தம்மை யொளிப்பதுதான் சாற்று.

(இ-ள்.) சண்டைசெய்யத் தைரியமில்லாதவன் பகைவர் சேனையைக்கண்டு பயந்து ஓடி யொளித்துக்கொள்ளலாம். யமன் எதிர்ப்படும்போது அவனுக்குப்பயந்து ஒருவன் எங்கு ஒளித்துக்கொள்ளலாம்.

## TRAVEL AND DESCRIPTION:
## AGRA.

## யாத்திரை க்ஷேத்திர வர்ணனை: ஆக்ரா.

இந்து தேசத்தில் பூர்வீகமானதும் அலங்காரமானதும் தேச சரித்திரத்தில் முக்கியமாய்க் கூறப்பட்டதுமான பட்டணங்களில் இந்த ஆக்ராவும் முக்கியமான பட்டணமாதலால் இதைப்பற்றி யாம் கேள்விப்பட்டதில் மட்டும் திருப்தியடையாமல் நேரில் சென்று பார்த்து, ஆநந்தமடைந்து, அப்பட்டணத்தின் சிறப்பை எழுதி முடியுமோ வென்ற ஆசங்கையினால் ஒவ்வொன்றையும் சவிஸ்தாரமாய் எழுதிக்கொள்ள வில்லாமல் எமது புஸ்தகத்தில் சுருக்கமாய்க் குறித்துக்கொண்டவைகளை நமது சிந்தாமணியைப் படிப்பவர்களும் படித்து சந்தோஷமடையுமாறு வரையலானோம்.

இப்பட்டணத்திற்குச் செல்லவேண்டுமானால் சென்னை இருப்புப்பாதையில் பெரிய சந்திப்பு ஸ்டேஷனாகிய அரக்கோணத்திலிருந்து ரேச்சூர் வரையினால் சென்று ஜி. ஐ. பி. இருப்புப் பாதை மார்க்கமாய் வாடி, டோண்டு, மன்மாட், புஷாவல், இடார்சி, ஜான்சி முதலிய சந்திப்பு ஸ்டேஷன்களின் வழியாய் நேர்வடக்காகச் சென்றால் ஒருவாரத்தில் போய்ச் சேரலாம். நாம் காசி, பிரயாகை, அயோத்தி, லக்னோ, கான்பூர், டில்லீ முதலிய இடங்களைப் பார்த்துக்கொண்டு மட்ரா (மதுரா) மார்க்கமாய் இந்த நகரத்தை யடைந்தோம். இவ்விடத்தில் ஆக்ராகோட்டை, ஆக்ராஜங்ஷன் என்பதாக இரண்டு ஸ்டேஷன்களிருக்கின்றன. ஒவ்வொரு ஸ்டேஷனும் வேண்டிய விஸ்தாரமும் அழகும் பொருந்திய கட்டடங்கள். ஆக்ராபோர்ட் என்கிற கோட்டை ஸ்டேஷன் பட்டணத்தின் மத்தியில் ஜிம்மா மசூதி என்ற கோரியின் கட்டடத்திற்கு சமீபத்திலிருக்கிறது. இந்த ஸ்டேஷனுக்கு அடுத்த தெருவே பெரிய கடைத்தெருவு. பிரயாணிகளின் சௌகரியத்தின்பொருட்டு ஸ்டேஷனுக்கு வெளிப்புறத்தில் ஒரு மத்தியமானவிடத்தில் எப்பொழுதும் டிக்கட்டுகள் விற்கப்படுகிறது. டிக்கட்டுப் பெற்றவர்கள் 24-மணி நேரத்திற்குள்ளாக வண்டியில் ஏறிப் போகலாம். தினத்திற்கு இவ்விடத்திலிருந்து புறப்படுகிற ஒவ்வொரு பாதையிலும் ஐந்து அல்லது ஆறுவண்டிகள் போய்க் கொண்டே யிருக்கிறபடியால் பிரயாணிகள் தங்கள் சௌகரியம்போல் டிக்கட்டுகள் பெற்றுக்கொண்டு இஷ்டமான வண்டிகளில் புறப்படுகிறார்கள்.

இந்த ஆக்ரா பட்டணமானது லெப்டினெண்டு-கவர்னருடைய ஆளுகைக்குட்பட்ட வடமேற்கு மாகாணத்தில் ஒரு டிஸ்திரிக்ட்டின் பிரதானபட்டணம்.

இந்த டிஸ்திரிக்ட்டுக்கு வடக்கே மட்ரா ஜில்லாவும், கிழக்கே மனியூர் என்ற ஜில்லாவும், தெற்கே டோல்பூர் என்ற இராஜ்ஜியமும், மேற்கே பரதப்பூர் (Bhurtpur) என்ற இராஜ்யமும் எல்லைகளாய் அமைந்திருக்கின்றன. இந்தப் பட்டணத்தை யடுத்து யமுனைநதியானது சுமார் அரைமைலில் அகலத்தில் ஓடிக் கொண்டிருந்தாலும் பூமி மட்டத்திற்கு அதிகம் தாழ்ந்து ஓடுவதால் பாசன வேலைகளுக்கு அந்நதியின் ஜலம் உபயோகப்படுத்தப்படுவதில்லை. இந்நகரத்திற்கு சற்று வடக்காக ஒரு அணைகட்டி, இந்நதியின்ஜலத்தை ஒரு கால்வாய் மார்க்கமாய்க் கொண்டுவந்து சாகுபடிக்கு உபயோகிப்பதாயிருந்தால் ஏராளமான பூமிகளில் நஞ்சைசாகுபடி செய்யலாம். விசேஷ இலாபத்தைக் குடிகள் அடையவும், கவர்ன்மெண்டாருக்கு அரசிறை அதிகப்படவும் காரணமாகும். கிணற்றுத் தண்ணீரை இறைத்தே கோதுமை, துவரை, கசகசா முதலிய பலதானியங்கள் விளைவிக்கப்படுகின்றன. பருத்தி ஏராளமாகப் பயிரிடப்படுகிறது. குடிகள் அநேகமாய் விவசாயிகளேயன்றி பம்பாய் முதலிய நகரங்களிலிருப்பவர்கள் போன்று கைத்தொழில், வியாபாரம் முதலியவைகளை கைக்கொண்டவர்களன்று.

இப்பட்டணத்திற்கு சமீபத்திலிருக்கிற பட்டிப்பூர் சிக்கிரி என்னும் மலைத்தொடர்களில் வெட்டியெடுக்கப்படும் செங்நிறமான கற்களைக் கொண்டுவந்து செதுக்கி வேண்டியமாதிரி உருவாக்கி கட்டப்படுகிற ஒவ்வொரு கட்டட வேலைகளுக்கும் உபயோகிக்கிறார்கள். இக்கற்கள் நயப்படுத்துவதற்கு அதிக அநுகூலமானதாகவும், கட்டடவேலைகளுக்கு மிகுந்த உறுதியும் வன்மையுமுள்ளதாயிருக்கிறபடியால் இந்த பிராந்தியங்களில் இக்கற்களால் கட்டப்பட்ட கட்டடங்களை அதிகமாகக் காணப்படுகின்றன.

யமுனாநதிக்கு இரண்டு அடுக்குகள் வைத்து ஒரு விநோதமான பாலம் கட்டப்பட்டிருக்கிறது. கீழ்புறத்திலுள்ள அடுக்கில் ரயில் வண்டிகள் செல்கின்றன. மேலடுக்கில் ஜனங்களும், குதிரை, எருதுகளால் இழுக்கப்பட்ட வண்டிகளும் செல்லுகின்றன. இந்த பாலத்திலிருந்து சுமார் எழுபதடி அகலத்தில் மூன்று மையில் நீளமுள்ள ஒரு பாதை போட்டிருக்கிறார்கள். இந்தப்பாதை நேராக டாஜ் மஹால் என்ற விநோதமான கட்டடம் வரையில் செல்லுகிறது. இவ்வளவு அகலமும் நீளமுமுள்ள பாதையானது ஒருவிதமான பலகைக் கற்களால் பாவப்பட்டு அதிக உறுதியாயும் குப்பை கூளங்கள் தங்க இடமின்றியும் வெகு இலக்ஷணமாகக் காணப்படுகின்றது. இந்தப் பாதையைப்போல் பட்டணத்திற்கு மத்தியில் சிற்சில தெருக்களில் கற்கள் பாவியிருக்கிறார்கள். இப்பாதைகளில் வண்டிகள் ஓடும்பொழுது பாறைகளின்மேல் ஓடுவது போலவே சப்தமுண்டாகின்றன. இப்பாதைகள் போடப்பட்டு இருநூறு வருஷமாயிற்றென்று சிலரும் கூறுகிறார்கள். பாதைகளிருக்கப்பட்ட ஸ்திதியை நோக்குங்கால் சுமார் 300, 400 வருஷங்களுக்கு முந்திப் போடப்பட்டிருக்கலாமென்று தோற்றுகிறது. யமுனை நதிக்கரையில் ஸ்நானபானங்களுக்கு உபயோகமாக பல தர்மகுணசீலர்கள் ஏராளமான திரவியச்செலவு செய்து அனேக படிக்கட்டுகளைக் கட்டியிருக்கிறார்கள். இப் படிக்கட்டுகள் பல சமயங்களில் உபயோகப்படாததாய் யமுனையில் ஜலமானது வற்றிப் படிக்கட்டுகளுக்கு வெகுதூரத்தில் ஓடுகிறது. அப்பொழுது பண்டாக்கள் என்ற ஜாதியார் தங்களுடைய பலகைகளையும், வெயிலுக்காகப் போட்டுக்கொள்ளும் குடிசைகளையும், பெருங்குடைகளையும் நதியின் ஜலத்திற்கு சமீபத்தில் கொண்டுபோய் வைத்துக்கொண்டு ஸ்நானத்திற்கு வருகிறவர்களை உபசரித்து தங்கள் பலகையின்பேரிலிருந்து யமுனாபூஜை, ஜபம் முதலியவைகளை செய்யச்சொல்லி, அதற்குக் கூலியாக கொடுத்ததைப் பெற்றுக்கொள்ளுகிறார்கள்.

இந்த யமுனாநதிக்கரையில் இப்பொழுதும் காணப்படும் சிற்சில பழஞ்சுவர்களைப் பார்வையிட்டால், இப்பட்டணமானது முன்காலத்தில் எவ்வளவு பெரியதாயிருந்திருக்குமோ எப்பேர்க்கொத்த மாடமாளிகைகளால் நிறைந்து விளங்கியதோ, எப்பேர்க்கொத்த கனதனவான்கள் குடியிருந்தார்களோ என்று பிரமிக்கும்படியான அப்பேர்க்கொத்த கற்களால் சுண்ணாம்புச்சாந்திட்டுக் கட்டியதாயும் 5, 6 அடி அகலமுள்ளவைகளாயும் காணப்படுகின்றன. பலர் கூறுகிறபடி இப்பட்டணமானது முன்னொருகாலத்தில் எட்டுமைல் நீளமும் 5 மைல் அகலமுமுள்ளதாயிருந்திருக்க வேண்டுமென்று நம்பப்போதிய காரணங்களும், அடையாளங்களும் காணப்படுகின்றன. முந்தியிருந்தபட்டணத்தில் பாதிபாகமே இப்பொழுது பட்டணமாக விளங்குகிறதென்று சொல்லலாம்.

இந்நகரத்தில் நடுநாயகமாக விளங்கும், கோட்டையிலிருந்து வடமேற்காக பட்டணத்திற்குள் செல்லும் தெருவு மிகவும் அழகானது. இத்தெருவின் இருபுறமும் ஐந்து, ஆறு அடுக்குகளுள்ள மெத்தைவீடுகளாலும், கூடகோபுரங்களுள்ள மாளிகைகளாலும், சிங்கார

மான கட்டடங்களாலும் காணப்படுவதன்றி அவைகளில் பல வியாபார வர்த்தகசாலைகளும் வைக்கப்பட்டு, எப்பொழுதும் இத்தெருவில் ஜனங்கள் கணக்கிட முடியாதபடி வந்துபோய்க் கொண்டேயிருக்கிறார்கள். இந்தத்தெருவும் பலகைக்கற்களால் பாவப்பட்டிருக்கின்றது. 'சவுக்' என்ற கடைத்தெருவில் உணவுப்பொருள்கள் மலைமலையாக குவிக்கப்பட்டு வெகு சகாயமாக விற்கப்படுகின்றன. சாயந்திரவேளையில் இச்சவுக்கண்டை ஜனக்கூட்டம் அதிகரித்து தெருவுடன் செல்கிறவர்களுக்கு வழியகப்படுவதே கஷ்டமாய் விடுகிறபடியால் போலீஸ் காரர்கள் சதாஜனங்களை குண்டாந்தடியைத் தூக்கிக்கொண்டு ஜா! ஜா! என்று கூவிக் கொண்டும், நிற்பவர்களை தள்ளிவிட்டுக்கொண்டுமே இருக்கிறார்கள். இச்சவுக்கிலிருந்து கிழக்காக மற்றொருதெருவு செல்லுகிறது. இந்தத்தெருவும் மெத்தைவீடுகளாலும் கூட கோபுரங்களாலும் வெகு விநோதமாகவே காணப்படுகிறது. இந்த வீடுகளின் மெத்தைகளின்பேரில் பலஜாதியாரான தாசிகளும், வேசிகளும், குடிப்புகுந்து தெருவில் செல்கிறவர்களுக்குத் தோன்றும்படியாக சோபா, நாற்காலி முதலியவைகளின் பேரிலுட்கார்ந்து வீணை, பிடில் முதலிய வாத்தியக்கருவிகளை வைத்துக்கொண்டு பாடியும், உல்லாசமாக உலாவியும், கேலி, நகைப்பு, ஆட்டமுதலிய செய்கைகளில் குடிகொண்டவர்களாய்த் தோற்றப் படுகிறார்கள். இப்படியே ஒவ்வொருதெருவின் விநோதத்தையும் கூறின் வியாசம் பெருகுமென்றஞ்சி விடலானோம்.

இந்த நகரத்தில் கட்டப்பட்டிருக்கும் சில கட்டடங்கள் தேர்ந்த சிற்பிகளும் மேல்நாட்டு இன்ஜினீர்களும் வியக்கத்தக்கவைகளாயும், பூலோகத்திலுள்ள ஏழு ஆச்சரியங்களில் ஒன்றாகிய (Taj Mahal) டாஜ் மஹால் என்ற அற்புதமான கட்டடத்தையுடையதாயும், மகாதர்மசீலரும் ஜீவகாருண்ணியருமான ஆக்பர் சக்கரவர்த்தியின் சமாதியும், இன்னும் பற்பல சிறந்த கட்டடங்களுமிருப்பதால் உலகத்தின் விநோதங்களைப் பார்க்க எண்ணமுள்ளவர்களாய் வெளிப்புறப்படுகிற ஒவ்வொருவரும் இவ்விடத்திற்குவந்து எட்டு அல்லது பத்துநாள் தங்குவதால் வீட்டுவாடகை அதிகப் பட்டிருப்பது அதிசயமன்றென்றே கருதலாம்.

கோட்டை.—இது சுமார் 700 வருஷங்களுக்குமுன் பட்டிப்பூர் மலையில் வெட்டி எடுக்கப்பட்ட சென்னிறமான கற்களால் ஆக்பர் பாதுஷா அவர்களால் கட்டப்பட்ட ஒரு அந்தமான பெரிய கட்டடம். இது யமுனையாற்றின் ஓரமாக சுமார் 5 பர்லாங்கு நீளமும் இரண்டரைபர்லாங்கு அகலமுமுள்ளதாய், சுமார் 45 அடி உயரமும் 20 அடி அகலமுமுள்ள மதில் சுவர்களுள்ளதாயும், சுற்றியும் பலவட்டமான வளைவுகளுடன் பெரும் அகழோடும் கூடியது. இந்த அகழில் யமுனையாற்றின் ஜலத்தைக்கொண்டுவர வழியும் செய்திருக்கிறார்களாயினும், இப்பொழுது அகழில் ஜலம் விடப்படுவதில்லை. இப்பொழுது இந்தக்கோட்டைக்குள் கொஞ்சம் பட்டாளம் வைக்கப் பட்டிருக்கிறது. இதற்குள்ளிருக்கிற (Motee Masjid) முத்து மஸ்ஜீத் ஷாஜீஹான் கட்டியதென்று தெரியவருகிறது. மூன்று வரிசையான 54 வெள்ளைக்கல் ஸ்தம்பங்களையுடையதாய் 540 புருஷர்கள் உட்கார்ந்து ஜபம்செய்ய இடம் குமிக்கப்பட ஒரு பெரிய அறையையும், அதற்கு அடுத்த புறத்தில் 60 கோஷா ஸ்திரீகள் உட்கார்ந்து ஜபம் செய்ய இடம் குமிக்கப்பட்ட ஒரு சிறிய அறையையும் உடையதாய், விநோதமான ஸ்தூபிகளுடன் வெள்ளைக்கற்களாலேயே 250 அடி நீளமும் 200 அடி அகலமும் கொண்டதான கட்டடம். இதற்கு முன்புறத்தில் விசாலமான ஒருமேடையும் அதில் ஜபம்செய்பவருகிறவர்கள் கைகால் முதலியவைகளை சுத்தஞ் செய்துகொள்ளத் தக்கதான ஒரு தடாகமும் காணப்படுகிறது. இந்தக்குளத்திற்கு யமுனையாற்றிலிருந்து குளாய்மூலமாய் ஜலம்வருகிறது.

ஷாஜீஹான் அரண்மனை.—இதுவும் வெள்ளைக்கற்களால் கட்டப்பட்டது. தரை வெள்ளை கருப்புச் சதுரக்கற்களால் பாவப்பட்டிருக்கிறது. இந்த அரண்மனையின் ஓரறையானது கட்டடத்தின் சுவர்களிலும் மூலைகளிலும் பொன்முலாப்பூச்சினால் பூங்கொடி வேலைகள் செய்யப்பட்டிருந்ததாகவும் கல்கத்தில் பரதப்பூர் கொள்ளைக்காரர்கள் அவைகளை சுரண்டிக்கொண்டுபோய்விட்டதாகவும், பிறகு அந்த மாதிரி பொன்முலாமிட மூன்று அடி நீளத்திற்கு இவ்வளவாகுமென்பதையறிய அங்கிலேயர் செய்துபார்த்ததில் 3000 ரூபாய் செலவானதாகவும், தெரியவருவதுடன் பித்தி முலாமிடப்பட்ட பாகம் மட்டும் இன்றைய வரையில் காணப்படுகிறது. இதற்கு அடுத்த பக்கத்தில் ஷாஜீஹான் மனைவியார் வாசஞ்செய்த அறைகளும், படுக்கை அறையும், அவ்விடத்திலிருந்தே ஸ்நானத்திற்கு யமுனையாற்றுக்குச்செல்லும் நிலவறையு மிருக்கின்றன. இதில் படுக்கையறை அதி அற்புதமானது. மூலை முடக்குகளில்லாமலும், மேல்பாகம் வில் வளைவாகவளைத்தும் வெள்ளைக்கற்களாலேயே கட்டப்பட்டு சுவர் முழுவதும் சிகப்பு, வயிரம், பச்சைமுதலிய கற்களாலேயே பதிக்கப்பட்டு இரண்டு புறத்திலும் விசாலமான இரண்டு கட்டில்கள் போடும்படியாக மேடைகளமைத்தும், மத்தியில் நினைத்தவுடன் ஸ்நானஞ்செய்யத்தக்க விதமாயமைத்த தண்ணீர் வெந்நீர் குழாய்களுடன்கூடிய தொட்டியை யுடையதாய், கட்டப்பட்ட கட்டடம். இதற்கு சமீபத்தில் ஒருவன் காவலாக இன்றும் வைக்கப்பட்டிருக்கிறான். இவனுக்கு ஒரு அணு கொடுத்துவிட்டால் உள்ளே கூட்டிக்கொண்டுபோய் தீபமேற்றி செவ்வையாகக் காட்டுகிறான். அப்படி பார்க்கும்பொழுது நாம் உண்மையாகவே ஒரு கட்டடத்தை பார்க்கிறோமென்ற எண்ணம்மறந்து கனவுதான் காண்கிறோமென்ற எண்ணமுண்டாய் பிரமிக்கச்செய்கிறது. நமது தேசத்தில் கட்டிக்கொண்டிருக்கப்பட்ட துணிகளை பலவித நிறத்துடன் ஜ்வலிப்பதால், அதை நேரில் பார்த்தவர்களுக்கேயன்றி மற்றவர்களுக்கு எவ்வளவு கூறியும் அதின் இலக்ஷணம் இவ்விதமானதென்று அறிவது சாத்தியமன்று. இதற்கு அடுத்த அறை நூர்ஜிஹான், ஷாஜீஹான் மனைவி உடுக்கும் அறை. இதில் வெள்ளைக்கற்களால் கட்டப்பட்ட சுவற்றில் நகை நட்டுகள் வைக்கும்படி பெரியதும் சிறியதுமான பல அறைகள் காணப்படுகின்றன. இப்படியே பல அறைகளும் மேடைகளும் காணப்படுகின்றன.

திவானீயம்.—இது ராஜாங்கவிஷயமான யோஜனைகள். செய்யப்பட்ட பெரிய ஹால். சுமார் 100 கஜ நீளமும் 30 கஜ அகலமுமுள்ளது. வெள்ளைக்கற்களாலேயே கட்டப்பட்டது. இரட்டை ஸ்தம்பங்களாகவே நான்கு வரிசையாக 40 ஸ்தம்பங்கள் வைத்து மேல்பாகத்தில் பலவித சித்திரங்கள் செய்தும், இதற்கு மேல்புறத்தில் ஸ்திரீகள் நின்று பார்க்கும்படியாக வெள்ளை கற்களில் செய்த திரைபோன்ற மறைவுள்ள இரண்டு சிறிய அறைகளுடன்கூடிய பெரிய கட்டடம். இந்த மண்டபத்தில் இராஜாங்க உத்தியோகஸ்தர்களுடன் ஆக்பர் உட்கார்ந்து பல விஷயங்களைப்பற்றி யோஜிப்பது வழக்கமாம்.

கசீனு மாஸ்க்கு.—இது இராஜ்ஜியத்திலுள்ள பெரியதனக்காரர்களுடன் சேர்ந்து ஆலோசனை செய்யப்பட்ட அறை. இதுவும் மூன்று வரிசையான 24 ஸ்தம்பங்களுடன் கூடிய பெரிய ஹால். வெள்ளைக்கற்களாலேயே கட்டப்பட்டது. இந்த அறைக்கு எதிர் புறத்தில் 40 அடி சுற்றளவுள்ள ஸ்படிகக் கல்லிருந்ததாகத்தெரியவருகிறது. இப்பொழுதும் ஒரு மேடையின்மேல் 40 அடி சுற்றளவுள்ள ஒரு கருங்கல் போடப்பட்டிருக்கிறது. இக்கல்லின் பேரிலுட்கார்ந்து பார்த்தால் 60 அடி பள்ளமான 5-6 பள்ளத்தாக்குகள் சுற்றியும் காணப்படுகின்றன. இந்த பள்ளங்களில் புலி, யானை முதலிய மிருகங்களை சண்டைக்குவிட்டு ஆக்பர் மேற்படி கல்லின் பேரிலுட்கார்ந்து கொண்டு

வேடிக்கை பார்ப்பது வழக்கமாம். மற்றும் சிலபள்ளங்களில் வரும் மீன்கள் விடப்பட்டிருக்குமாம். இந்த கல்லிற்கு அடுத்த கட்டடமாகிய இந்து ராஜஸ்திரீகளை வைத்திருந்த அறைச்சுவற்றின்பேரில் 15 அங்குல சுற்றளவுள்ள பீரங்கிக்குண்டு பாய்ந்து துளைத்தவளை இன்றும் காணப்படுகிறது.

இந்த சுகீனா மாஸ்க்குக்கு எதிரில் வடமேற்கு மாகாண லெப்டினெண்டு கவர்னராகவிருந்த மிஸ்டர் J. R. Colvin என்ற ஐரோப்பியருடைய தேகம் அடக்கம் செய்யப்பட்டு கல்லும் பதிக்கப்பட்டிருக்கிறது. தவிர ஷாஜீஹான் ஸ்நானஞ்செய்து வந்த பெரிய கல் தொட்டி யொன்றும் காணப்படுகிறது. இது சுமார் 6 அடி உயரமுள்ளதாய் மேலே ஏறிச் செல்ல நான்கு படிகள் வைத்து மிகவும் இலேசானதாய் செய்யப்பட்ட கல் தொட்டி.

இவைகளையெல்லாம் பார்த்துக்கொண்டு வந்தால் பேர்பெற்ற சோமநாத் கோவில் தலைவாயிலின் கதவு சுமார் 25 அடி உயரமும் 16 அடி அகலமுமுள்ளது. இதை இவ்விடத்தில் கொண்டுவந்து வைத்திருக்கிறார்கள். இது சந்தனமரம் என்பதாகவும், கோர்க்கப்பட்டிருக்கிற ஆணிகள் வெள்ளி என்பதாகவும் தெரியவருகிறது. இது இவ்விடத்திற்கு வர வேண்டிய காரணம் தெரியவில்லை.

ஆகவே, இந்த கோட்டையைபோன்ற பலமானதும் அதிக வேலைப்பாடுள்ளதும், அநேக விசித்திர விநோதங்களைக் கொண்டதுமான கோட்டை அந்த தேசத்திலேயே இல்லை என்று கூறலாம். இந்தக்காரணத்தைக் கொண்டே இப்பொழுதும் இந்தக்கோட்டைக்குள்ளிருக்கிற கட்டடங்களை கவர்ன்மெண்டார் இடிக்காமல் காப்பாற்றி வருவதுடன் இதற்குள்ளாகவே இந்த ஜில்லா கஜானாவையும் வைத்துக்கொண்டிருக்கிறார்கள்.

## NOTES ON ALUMINIUM AND ITS ALLOYS.

## அலுமினியம் என்னும் உலோகம்.

அலுமினியம் என்பது தங்கம், வெள்ளி, ஈயம், இரும்பு முதலிய உலோகங்களைப் போன்ற ஒரு தாதுப்பொருள். இந்த உலோகத்தினால் செய்யப்படும் பாண்டங்கள், பித்தளை, வெண்கலம் முதலிய கலப்பு உலோகங்களாலும் ஈயம் துத்தநாகம் முதலிய உலோகங்களாலும் செய்யப்பட்டு சாமானியமாய் நமது தேசத்தார் உபயோகப்படுத்திவரும் பாத்திரங்களைக் காட்டிலும், அதிக சுசிகரமும், சுத்தமும், தேக ஆரோக்கியமு முண்டாக்கக் கூடிய குணங்களுள்ளவையானதால் இந்த உலோகத்தைக்குறித்து ஒருவாறு இவ்விடத்தில் எழுதப்படுகிறது.

இந்த உலோகம் தங்கம், வெள்ளி, பாதரசம், தாமிரம் அல்லது செம்பு முதலியவைபோல இயற்கையிலேயே சுத்தமான ஸ்திதியில் கிடைக்கக்கூடியதல்ல. ஆனால் இது [1] பிராணவாயுவினும், சில [2] காரச்சரக்குகளுடனும், புளிப்புச்சரக்குகளுடனும்[3] கலந்து பாறைகளிலும், மண்ணிலும் விசேஷமாய் அகப்படுகிறது. கருங்கல், வெண்கல், [4] அப்பிரகம் முதலியவைகளிலும் இந்த உலோகம் அதிகமாய்க் கலந்திருக்கிறது. நாம் ஆபரணங்களாக உபயோகப்படுத்தும் கெம்பு, நீலம், செம்மணி, இந்திர நீலக்கல், புஷ்பராகம் முதலிய இரத்தினவகைகளும் இந்த உலோகம் பிராணவாயுவுடன் கலந்து பளிங்குருவமடைவதால் உண்டாகின்றன. கந்தகாமிலீயமான இந்த உலோகமே [5] படிக்காரமென்று சொல்லப்படுகிறது. களிமண்ணில் [6] அலுமினியம் உலோகமும், [7] ஸிலகான் என்னும் தாதுப்பொருளும் பிராணவாயுவும் கலந்துள்ளன.

---

1 Oxygen. 2 Alkalies. 3 Acids.

4 Mica. 5 Alum = Aluminium Sulphate. 6 Clay = Aluminium silicate + Aluminium + Silicon + Oxygen.

7 Silicon ; இந்த தாதுப்பொருள் பிராணவாயுவுடன் கலந்து உண்டாயிருப்பது ? சமுத்திரமணல், சக்கிமுக்கிக்கல், மணற்கல் முதலியன.

இந்த உலோகத்தின் நிறம் வெள்ளியைப் போன்ற சுத்த வெண்மையானது. ஆயினும் இதன் நிறம் அதைக்காய்ச்சி உருக்கும் சூட்டிற்கு அனுகுணமாயிருக்கும்.

இந்த உலோகத்தை உருக்கி குளிர்ந்த அச்சுகளிலாவது, அல்லது ஈரமணலினுலாக்கப்பட்ட அச்சுகளிலாவது வார்த்து சிக்கிரத்தில் ஆற்றினல் அதற்குப் பிரகாசமான வெண்ணிறமுண்டாகும். ஆனல் வெகு சூட்டுடனுவது அல்லது உலர்ந்த மண்ணச்சுகளிலாவது வார்க்கப்பட்டால் அதன்நிறம் ஈயத்தைப்போன்ற சாம்பல் வாணமாகவும், துத்தநாகத்தைப் போன்ற வெண்மை கலந்த நீலவாணமாகவுமிருக்கும்.

இந்த உலோகத்தினுல் செய்யப்படும் பலவித தட்டுமுட்டு சாமான்களும், கிரககிருத்திய காரியங்களுக்கு உபயோகமாகும் பாத்திரவகைகளும், சாதாரணமாய் நமது தேசத்தில் வழங்கிவரும் பித்தளை, செம்பு, வெண்கலம், ஈயம், தகரம், துத்தநாகம முதலிய உலோகங்களால் ஆக்கப்படும் சாமானகளையும் பாத்திரங்களையுங் காட்டிலும் பல விஷயங்களில் மேன்மைப்பட்டுள்ளனவாக அனுபவத்தால் தெரியவருகிறபடியால் அவைகளை ஒருவாறு இவ்விடத்தில் எழுதுகிறோம்.

சுத்தமான அலுமினியத்தினுல் செய்த பாத்திரங்களில் பித்தளை, தாமிரம் முதலியவற்ருல் செய்த பாண்டங்களில் களிம்பேறுவதுபோலும் நாற்ற முண்டாவதுபோலும் ஒருவிதக் கெடுதலும் உண்டாவதில்லை. சுத்தமில்லாமல் 'ஸிலிகான்' முதலிய தாதுப்பொருள்களுடன் கலக்கவிட்டு உருக்கினுல், அது தண்ணீருடனும் புளிப்பு வஸ்துக்களுடனும் சம்பந்தப்படும்போது இருமபுத் துருவைபொத்த நாற்றமுண்டாகும். ஆனல் சுத்த அலுமினியத்திற்கு நாற்றமில்லை. இநத விசேஷகுணததால் இநத உலோகத்தாலாக்கப்படும் பாத்திரஙகளுக்கு ஈயம் பூசவேண்டிய நிமித்தமில்லை; இவைகளில் சமைக்கப்படும போஜன வகைகள் தேகத்திற்கு ஆரோக்கியத்தை யுண்டாக்கும். தாமிரப் பாத்திரத்தில் ஜலத்தைக் காய்ச்சிச் சாப்பிடுவதால் உடனே வாந்தியுண்டாவதைப் பலகாலும் அனுபவத்தால் கண்டிருக்கிறோம. தண்ணீர் காயும் பொழுது அந்த சூட்டில் தாமிரமும மிகவும் கொஞசவளவு உருகித தண்ணீரில கலப்பதால் உண்டாகும் ஒருவிதமான பாஷாணமே வாந்தியை யுண்டாக்குகிறது. சுத்த அலுமினியப் பாத்திரங்களில் திரவ வஸ்துக்களை எவ்வளவு சூடேற்றிக் காய்ச்சினுலும் அது கொஞ்சமேனும் உருகாது. வெள்ளிப் பாத்திரங்களை வெளியே வைத்திருப்பதால் ஆகாயத்தில் பரிணமித்துக்கிடக்கும்[8] கந்தகம் கலந்த ஜலவாயு அவைகளின்மேபேரில் படும்போது ஒருவித கருப்புக்களிம்பேறி அவைகள் பார்வைக்கு அவலட்சணமாகின்றன. ஆனலோ அலுமினியப் பாண்டங்களில் அந்தவாயு லவலேசமும் பற்றுகிறதில்லை; எப்போதும் சுத்த நிறமாயிருக்கும்.

அலுமினியமானது அதே பரிமாணமுள்ள தங்கத்தின் எடையில் சற்றேறக்குறைய $7\frac{1}{4}$-க்கு ஒன்றும், ஈயத்தின் எடையில் $4\frac{1}{4}$-க்கு ஒன்றும், வெள்ளியின் கனத்தில் 4-க்கு ஒன்றும், செம்பின் எடையில் $3\frac{1}{4}$-க்கு ஒன்றும், பித்தளையின் கனத்தில் $3\frac{1}{8}$-க்கு ஒன்றும், துத்தநாகத்தின் கனத்தில் $2\frac{3}{4}$-க்கு ஒன்று'மாக உள்ளது. ஆகவே இந்த உலோகமானது நாம் பாத்திரங்களாக உபயோகப்படுத்தும் எல்லா உலோகங்களைக் காட்டிலும் கனக்குறைவானது. இதனுல் வழிப்பிரயாணங்களுக்காகக் கொண்டுபோகவேணடிய பாத்திரச்சாமான்களை இந்த உலோகத்தினுல் செய்துகொள்வதால் அதிக கனமின்றி சுலபமாய் அவைகளைக் கையாடுவதற்கு அனுகூலமாயிருக்கும்.

வெள்ளி, செம்பு, தங்கம் இம்மூன்று உலோகங்களுக்கும் அடுத்தபடியாய் மற்ற உலோகங்களைக்காட்டிலும் அலுமினியத்தல் நெருப்புச்சூடு சீக்கிரத்தில் பிடிக்கும். ஆதலால அலுமினியப் பாத்திரங்களில் சமையல் செய்வதில் மற்ற வெண்கல முதலிய பாத்திரங்களில் செய்வதைக்காட்டிலும் விறகு குறைவாகவ செலவாகும். கீழே விழுநத மாத்திரத்தில் உடையக்கூடிய வெண்கலப் பாத்திரங்களைப்போலல்லாமல் அலுமினியப் பாததிரஙகள கீழே விழுந்தாலும உடைந்து நஷடமாகா. அவைகளைத் துலக்குவதும் சுலபமானது.

காய்ச்சிப் பதப்படுத்திய அலுமினியமானது அதிக மெதுவடைகிறபடியால் அதை அதிக மெல்லிய வெள்ளிரேக்குகளைப்போலவும் கம்பிகளைப்போலவும அடிக்கவும நீட்டவும கூடும். அலுமினிய ரேக்குகள வெள்ளி ரேக்குகளைத் காட்டிலும விலை சரசத்தனும் களிமபேராக்

8. Sulphide of the Oxygen.

தன்மையிலும் சிறந்ததாதலால் அலங்காரச் சித்திரிப்பு வேலைகளில் மிகவும் பிரயோசனப் படுகின்றன. இந்தரேக்குகள் பொடி செய்யப் பட்டு ஒருவித வெள்ளிப பூச்சுவர்ணமும் செய்ய உபயோகப்படுகின்றன.

அலுமினியத்தால் செய்யப்படும் பாத்திரங் களின் விலை அதேமாதிரியான பித்தளைப்பாத் திரங்களைக் காட்டிலும் இரண்டுமடங்கு அதிக மும், வெண்கலப் பாத்திரங்களைக் காட்டிலும் கால்பங்கு அதிகமும், வெள்ளிப் பாத்திரங் களைக் காட்டிலும 30 பங்கு குறைவும் உள்ள தாகச் சொலலப்படுகிறது. சாமானியமாய் பித்தளை தாமிரமுதலியவறறால் செய்யப்படும் பாத்திரங்களைககாட்டிலும் அலுமினியப் பாத் திரங்களின்விலை அதிகமாகவிருந்தாலும் அதற் கேற்ற அனுகூலங்களுமிருக்கின்றன வென்று இவ்வுலோகத்தால் செயத பாத்திரங்களை இங்கு வழக்கத்துக்குக் கொண்டுவர முயற் சித்துவரும மிஸடர் சாட்டர்டன துரை சொல் கிறார். (இவர் இப்பொழுது ராயல் இண்டஸ டிரியல கமிஷனில் ஒரு மெமபராகவிருந்து கோட்டை கௌனஸில ஹாலில் உட்கார்ந்து விசாரணை செய்துவருகிறார். இவரைக் கண்டு மறுபடியும் அவையளாவிய காரணத்தினல் இவர் முன சென்னையிலிருந்தபொழுது எழுதப் பட்டவிஷயம் திருத்திமறுபடியும உபயோக மாகும்படி பிரசுரிக்கப்பட்டிருககிறது.)

செம்புடன ஈயம், துத்தநாகம் முதலிய உலோகங்களைக் கலப்பதால பித்தளை, வெண் கலம் முதலிய வேறு கலப்புலோகங்கள் செய் யப்படுவதுபோல் அலுமினியததுடன் மற்ற சில உலோகங்களைக் கலந்து கலப்பு உலோகங் கள் செய்வதுண்டு.

நமது சென்னைநகரிலுள்ள சித்திர வித்தியா சாலை (School of Arts)யில் அலுமினியததால் அழகிய தவலை, அடுககுப்பாத்திரம, தட்டம், அடுககுஞ்சட்டி, குடம, சொமபு, பாணலி, லோட்டா டமலர், தூக்குச்சட்டி, 'கோகர்ணம, தூக்குச்சொம்பு, கூஜா முதலிய பலவித வீட்டுப் பாத்திரங்களும தயார் செய்யபபட்டு கூடு மானவரையில விலைசரசமாகவும் விற்று வந்தது. இப்பொழுது திருவல்லிக்கேணி ஹைரோட்டி லிருந்து அலுமினியம பாக்டரியில சொந்தக கமபெனி மேலவிசாரணையில இனனும ஏரா ளமாகச்செய்து லாபகரமாக விற்கபபட்டுவரு கிறது.

## CHILDREN'S PAGE.

### A FIGHT BETWEEN A TIGER AND A WILD BOAR.*

### சிறுவர்க்கான பக்கம்.

### புலிக்கும் காட்டுப்பன்றிக்கும் நடந்தசண்டை.

BY MR. M. S. H. THOMPSON,

*(Assistant Inspector, Training School.)*

சில வருஷங்களுக்கு முன் வங்காள தேசத் தில் வடக்கேயிருக்கும் பூர்ணியா ஊரிலே ஜேம்ஸ் இங்கில்ஸ் துரையொருவர் வேட்டை யாடுவதில் மிகக கீர்த்தி பெற்றிருந்தார். முககியமாய் அவர் வேட்டையாடின மிருகம் புலியாகும். இம்மிருகத்தைப் பற்றி அவர் விசே ஷமாய் ஒரு பெரிய புஸ்தகத்தில எழுதியிருக் கிறார். அதிற்கண்ட ஒரு கதை இதனடியில் எழுதியிருக்கிறேன்.

புலிக் குட்டியானது தாயோடு சுமார் இரணடுவருஷ காலமிருந்து, வேட்டையாடக் கற்றுககொண்டு, தனியாக வேட்டையாடுமாம். தாய் விட்ட புலி தான் மிகவும் அஞ்சத்தககது. அது எருமை முதறகொணடு எந்தமிருகத தையும் கொல்லும. அது அடிபட்டுக் கிடக் கும்போது யானையைக்கூட அடிப்பதுணடு.

ஒரு நாள் இங்கிலஸ் துரையானவர் தன் தோழமனுடு ஒரு பள்ளத்தில பதுஙகியிருந் தார். அப்போது சுமார் பததுமணி இரவு. சுற்றுப் புறத்தில எங்கும் மூடுபனி மூடிக் கொணடிருந்தது. ஆகாயததில மேகஙகள் நிலா வெளிச்சததைத தடுததுக் கொண்டு மெதுவாய மேறகுத்திசை நோக்கிச் சென றன. ஆனல, வெளிச்சமலலாவிட்டாலும் தான் இரு க்கற பள்ளததிலிருந்து தரை மேற செல்லும ஒவ்வொரு 'பிராணியின உருவம நனறாயத் தெரிந்தது. தூரததிலே ஒருபுறம கிராமம தெரிநதது. ஒருபுறம காடு, காறறு கருங்கடல போல தன்ரை மட்டததிலும காடுகள மீதும் அலையடித்துககொணடு போனது. கொசுக்கள ஓட்டுவதற்காகக் கிராமததில இஙகுமஙகும் செத்தை கொளுத்துவது மினமினிப பூசசி யின மினனலபோல தோறறினது. எஙகும் தோ வந்த மஙகலான ஒரு சததந்தவிர வேறு சததம் கிடையாது.

* Compiled *Tent Life in Tigerland* by James Inglis (Hutchison & Son, Sydney, 1888.) Specially written for the Viveka Chintamani.

திடீரென்று யாரோ ஒருவன் ஒரு பாறையைத் தள்ளிவிட்டதுபோல் ஒரு உருவம் காட்டுத் திக்கிலிருந்து ஓடிவந்தது. இதென்ன ஓடிவருகிறதென்று நன்றாய் உற்றுப் பார்க்கவே காட்டுப் பன்றியென்று வேட்டைக்காரர்களுக்குத் தெரிந்தது. காட்டுப்பன்றி பயங்கரமான மிருகம். நம்மைக்கண்டால் அதனின்று தப்பித்துக் கொள்வது அசாத்தியம். ஆகவே பள்ளத்தில் பதுங்கிக் கிடக்கும் இருவரும் துப்பாக்கியைத் தோள் மட்டத்துக்குக் கொண்டுவந்து பன்றியைச் சுடப்போனார்கள். அச்சமயத்திலோ பன்றி நின்றுவிட்டது. நான்குபக்கமும் திரும்பிப் பார்த்து, "ஹா! ஹா! என்று முறட்டுத்தனமாய்க் கத்திற்று. பிடரிமயிர் கம்பிபோல் செங்குத்தாய் நின்றது. ஏதோ ஒரு சங்கடமநேரிட்டதோ? அல்லது தனது இனத்தார் தன்னைக் கைவிட்டதனால் கோபமோ என்று இப்படி வேட்டைக்காரர் இருவரும யோசிததுக் கொண்டிருக்கும் போது, தரைக்குத்தரையாய் ஒருகால் மற்றொருகாலுக்கு முன் மெதுவாய வைத்துக் கொண்டுசெல்லும ஒரு இளமபுலியைக் கண்டார்கள். இப்படியும அப்படியும் புல்பூண்டுகளுக்குப்பின பதுஙகிவந்தது. புலி எபபடிவந்தாலும பன்றி ஏமாந்துபோகாமல் அதை எதிாக்க சிததமாய் இருநதது. புலிக்கும பனறிக்குமுள்ள தூரம சுமார் நான்கு கெஜமிருக்கும் போது, புலி ஓ வென்றுகூவி, ஓரே பாய்ச்சலாய்ப் பாய்ந்து, பன்றியை முகத்தில் ஒரு அறை அறைந்தது. பன்றி அறையைவாங்கித் தலையை அசைத்துப் புலியை தன் நீண்ட பற்களினால் கீறிறறு. புலி உடனே அப்புறம பாய்ந்து வாலை வீசி, கோபாக்கினி சிதறுமபடி பயங்கரமான தனது இரண்டு கண்களினால் பன்றியை உற்றுப் பார்ததது. திரும்பிப் பிரதடசணஞ் செய்ய ஆரம்பித்தது. பனறியும ஜாக்கிரதையாய்ததிரும்பி திருமபிப் பார்த்து, கொஞ்சகொஞ்சமாய் இரண்டு மிரகங்களும பளளத்துக்குச் சமீபத்தில்வந்தன. அப்போது இரண்டிறகும பட்ட கொடியகாயங்கள் வேடாகளுககுத தெரிந்தன. அப்பப்பா, புலி அறைந்த அறை எனன அறை! சதை அப்படியே வந்து விட்டது, இரத்தம் தாரை தாரையாய்த தரையில் சிந்தினது. புலிக்கும் உடல் நிரம்ப இரத்தம்.

மறுபடியும் புலி நல்லசமயம் பார்த்து உரக்கக் கூவி, பன்றி முதுகின் மேல் பாய்ந்தது. கொத்துக்கொத்தாய்ச் சதையைக் கடித்துப் போட ஆரம்பித்தது. பன்றி இடறி விழுந்து, புலியை தனது முதுகிலிருந்து உதறி விட்டு, மல்லாக்காய்த் தள்ளிப்போட்டது. பின்பு கண்ணிமைப் பொழுதிலே எழுந்து நின்று, புலியின் வயிற்றை முன்கால் முதல் பின்கால் வரையில் கீறிப்போட்டு, நிற்கச் சக்தியற்று இங்குமங்கும் அலைந்து இடறிக் கீழே விழுந்து புலியோடு மாய்ந்தது.

M. S. H. THOMPSON.

---

## EVENTS OF THE MONTH.

## மாத விசேஷங்கள்.

### INDIA AT THE IMPERIAL CONFERENCE.

லண்டனில் யுத்தகாலத்துக்கு ஏற்றபடி ஐந்துபேர்கள் மட்டும சேர்ந்த யுத்தமந்திராலோசனை சபை (War Cabinet) மிஸ்டர் லாய்ட் ஜியார்ஜ் அவர்கள் முதல மந்திரியாகவிருக்க நியமிக்கப்பட்ட விஷயத்தை இப்பததிரிகையில் வெளியிட்டிருக்கிறோம். அந்த மந்திராலோசனை சபையார்தானே பிரிடிஷ் குடியேற்ற நாடுகளின் முதல் மந்திரிகளாயிருப்பவர்களையும் இந்தியா மந்திரியவர்களையும் சேர்த்துக்கொண்டு "இம்பீரியல் கான்பரென்ஸ்" என்கிற பேரினால், யுத்தத்தை ஜயகரமாய் முடிக்கும வகையைப்பறறியும் யுததத்திற்குபபின் பிரிடிஷ் மஹாராஜ்யத்தின் அமைப்பு எப்படி மாறுபடலாமென்பதைப் பற்றியும ஆலோஜிக்கத தீர்மானித்திருக்கிறார்கள். அந்த சபையில் இந்தியாவுக்குப் பிரதிநிதியாகவுள்ள இந்தியா மந்திரிக்குத் துணையாக மூன்றுபேர்களைப் பொறுக்கி இந்தியாவின் பிரதிநிதிகளாயிருந்து ஆலோசனை சொல்ல ஏற்படுத்தியிருக்கிறார்கள். அவர்கள் பேர்:—(1) ஐக்கியமாகாணங்களின் உதவிக் கவர்னராயிருக்கும கனம் ஸர் ஜேமஸ் மெஸ்டன்; (2) இந்தியா கவர்ன்மெண்டில் மந்திரிஸ்தானம் வகித்திருந்து இப்பொழுது பெங்கால் கவர்னமெண்டில் மந்திரிஸதானம் வகித்து வருபவரும் பமபாயில கூடிய காங்ரெஸ் மஹாசபைக்கு அக்கிராசனாதிபதியுமாகிய ஸர் ஸத்யேந்திர ப்ரஸாத ஸிமஹா அவர்கள்; (3) இராஜபுத்திரஸ்தானத்தில்

பிகானீர் ராஜ்யத்து மஹாராஜா அவர்கள்; ஆகிய இம்மூவரும் இந்தியாவுக்குப் பிரதிநிதிகளாயிருந்துதவ நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்.

ராயல் இண்டஸ்ட்ரியல் கமிஷன்.

இந்தியாவின் கைத்தொழில் வியாபாரவிர்த்திக்கு அநுகூலமான சாதக சாதனங்களை விசாரித்தறிந்து தெரியப்படுத்துவதற்காக நியமிக்கப்பட்ட ராயல் கமிஷன் சபையார் சென்னைக்கு விஜயமாகி ஜனவரிமீ 22உ முதல் 31உ வரையில் கோட்டையிலுள்ள கௌன்ஸில் ஹாலில் உட்கார்ந்து சாக்ஷிகளை விசாரித்துவிட்டுப் போனார்கள். இந்தக் கமிஷனுக்குத் தலைவர் ஸர் தாமஸ் ஹாலண்ட் அவர்கள். இதர மெம்பர்கள்:—

(1) மிஸ்டர் ஆல்ப்ரெட் சாட்டர்டன் ஸி. ஐ. இ.
(2) ஸர் பாஸுல்பாய் கர்ரிம்பாய்;
(3) டாக்டர் இ. ஹாப்கின்ஸன்;
(4) ஸர் ஆர். என். முகர்ஜி
(5) ஸர் ப்ரான்ஸிஸ் ஸ்டேவர்ட்
(6) கனம். மிஸ்டர் ஸி. இ. லோ
(7) பண்டித் மதனமோஹன மாலவியா
(8) ஸர் டோராப்ஜீடாடா

இந்தக் கமிஷனுக்குக் காரியதரிசி மிஸ்டர் பெல்.

தேசபாஷையிற் போதனை.

டில்லியில் கூடிவரும் வித்யா இலாகாத் தலைவர்கள் சேர்ந்த சான்பரென்ஸ்முன் தேசபாஷை அல்லது ஸ்வபாஷையிற் கல்வி கற்பிக்கவேண்டிய அவசியத்தைப்பற்றி அரசர் பிரதிநிதியவர்கள் அவருடைய பேச்சில் பிரஸ்தாபித்த விஷயமாய் சுதேசமித்திரன் பத்திராசிரியர் 24உ சஞ்சிகையில் பின் வருமாறு எழுதுகிறார். அவருடைய அபிப்பிராயம் நமது அபிப்பிராயத்தோடும் இது விஷயமாய்ப் பேசத்தகுந்தவர்கள் தெரிவித்துள்ள அபிப்பிராயத்துக்கும் ஒத்திருப்பதால் அதை அப்படியே எடுத்துக் கீழே பிரசுரிக்கிறோம். இராஜப்பிரதிநிதியவர்கள் அந்நிய பாஷையிற் பயின்று பரீக்ஷை தேறும் மாணாக்கர்களுடைய கல்விக் குறைவைக்கண்டும் அவர்களுடைய குணத்தை மெச்சிப் பேசியிருப்பது அவருடைய உள்ளப்போக்கைத் தெரிவிப்பதாயிருக்கிறது. லார்ட் செம்ஸ்போர்ட் யூனிவர்ஸிடியில் படித்துத் தேறினவராதலால் யூனிவர்ஸிடி படிப்பின் பிரயாஸை யறிந்து பேசியிருக்கிறாரென்பது நாம் சொல்லாமலே அமையும். சுதேசமித்திரன் அபிப்பிராயம் இது:—"கல்வி ஸ்தாபனங்களில் போதிக்கப்படும் பற்பல பாடங்களையும் மாணவர்கள் நன்கு அறிந்துகொள்ளவேண்டுமாயின், தேசபாஷையின் மூலமாகவே போதனை நடக்கவேண்டுமென்று பலர் விரும்பியிருக்கின்றனர். தேசபாஷையின் மூலமாய் போதிக்கவேண்டிய அவசியத்தையும் நன்மையையும் குறித்து முன்பே நாம் பலதடவைகளில் வற்புறுத்தியிருப்பதோடு, கல்கத்தா ஹைகோர்ட்டில் ஜட்ஜியாயிருந்த பாபு ஸாரதா சரணமித்திரா முதலிய பெரியோர்களின் அபிப்பிராயத்தையும் எடுத்துக் காட்டியிருக்கிறோம். இந்த உண்மையை லார்டு செம்ஸ்போர்ட் நன்குணர்ந்து தேசபாஷை போதனையில் ஆதரவு கொண்டு வற்புறுத்திப் பேசியிருப்பதை இங்கே குறிப்பிடுவதவசியம். வித்தியா இலாகா அதிகாரிகளை நோக்கி இவ்விஷயமாக அவர் சொல்லியதாவது:—

"நமது கல்விமுழுவதும் அன்னிய பாஷை மூலமாகவே போதிக்கப்பட்டிருக்குமாயின் நாம் எப்படியிருந்திருப்போமென்று உங்களைக் கேட்கிறேன். என்னையும் நானே கேட்டுக்கொள்ளுகிறேன். அன்னிய பாஷையின் மூலமாகவே போதனை நமக்கு இருந்திருக்குமாயின் நாம் அதைரியத்துடன் படிப்பை விட்டிருக்கமாட்டோமா? அன்னிய பாஷையின் மூலமாகவே போதனை என்ற தீங்கான முறைமையை தீரமுடன் சமாளித்து விஷயங்களை யறிந்துகொண்டு வெளிக்கிளம்பும் மாணவர்களைக் கண்டு நான் ஆச்சரியத்தில் ஆழ்ந்து விழும்படியிருக்கிறது. எனவே, கூடுமான வரையில் தேசபாஷையின் மூலமாகவே போதிக்கவேண்டும். கடைசியில் தான் ஆங்கில பாஷையின் மூலமாக போதிக்கவேண்டும். இல்லையேல் ஆங்கில பாஷையைப் போதிப்பதில் நாம் மிக்க கவனம் செலுத்தவேண்டும்."

"இவ்விதம் அவர் சொல்லியிருப்பதை அனைவரும் சந்தோஷத்துடன் சிந்தித்துப் பார்ப்பார்களென நம்புகிறோம். இவ்விஷயம் விவாதத்திற்கு வந்தபொழுது தேசபாஷையின்

மூலமாய் போதனை இருக்கவேண்டுமென்று சென்னை மாகாணத்தினர் விரும்பியிருக்கின் றனரென்பது "ஜம்பப் பேச்சாகும்" என நமது வித்தியா இலாகாத் தலைவர் சொல்லி யிருப்பதைப் பார்த்தால் பலரும் ஆச்சரிய மடைவார்கள். "ஜம்பப் பேச்சாகு" மென்று அவர் இலகுவில் சொல்லிவிட்டது சரியா வென்பது கேள்வி. யுத்தம் முடிந்தபின் இவ் விஷயம் ஆலோசனைக்கு எடுத்துக்கொள்ளப் படுமாதலால், அனைவரும் தங்களது திட்ட மான அபிப்பிராயத்தைச் சொல்வதற்கு இப் பொழுது முதற்கொண்டே சிந்தனை செய்ய வேண்டுமென்று ராஜப்பிரதிநிதி அறிக்கை செய்திருக்கிறார்.

லண்டனில் நேர்ந்த பெருவிபத்து.

லண்டன் ஆயுதத் தொழிற்சாலையில் தீப் பற்றி யந்திரம் வெடிக்க, அதனால் அதிக உயிர்ச்சேதமும் பொருட்சேதமும் நேர்ந்தது. இறந்தவர்கள் 100-பேர். காயம்பட்டவர்கள் தொகை 400. பொருள் நஷ்டம் ஏராளம். அந்த ஆயுதத் தொழிற்சாலையில் முக்கியஸ்தரா யிருந்த ரசாயன நிபுணர் அபத்தில் மாண்டனர். அவருடைய மனைவியும் அந்த ஆயுதத் தொழிற் சாலையில் வேலைசெய்யும் ஸ்திரீகளுக்குத் தலை வாயிருந்தார். அவர் அந்த சமயம் வெளி யில் போயிருந்த காரணத்தினால் தப்பிக் கொண்டார். இப்படிப்பட்ட ஆபத்துகள் இனி நேரிடாதபடி வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன. இதற்குக் கார ணம் தீவிபத்தன்றி வேறு பிசகொன்றுமில்லை யென்று தோன்றுகிறது.

வெடி விபத்தினால் கஷ்டத்திற்குள்ளான வர்களுக்கு உதவி செய்வதற்கு, ஜார்ஜ் அரசர் 250 பவுனும், மஹாராணி 100 பவுனும், அலெக்ஸாந்திரா ராணியார் 100 பவுனும் கொடுத்திருக்கிறார்கள். காயமடைந்தவர் களின் தேக ஸ்திதியைப்பற்றி அரசர் ஆஸ்பத் திரி அதிகாரிகளிடம் விசாரணை செய்தார். அலெக்ஸாந்திரா மஹாராணி விபத்துக்குள்ளா னவர்களுக்கு தமது அநுதாபத்தை தெரிவித் திருக்கின்றார்.

ரயில்வண்டித் தொடர்கள் போக்குவரத்துக் குறைவு.

பிப்ரவரி 1உயிலிருந்து ரயில்வே சம்பந்த மாய் செட்டுச்செய்ய சில நூதன விதிகள் ஊர்ஜிதத்துக்குவரும். மெஸபொடேமியாவில் யுத்தம் நடக்கிற இடங்களுக்கு இந்தியாவி லிருந்து ரயில்வே இஞ்சின்களும் வண்டிகளும் அனுப்பவேண்டி யிருப்பதால் இதுவரையில் ரயில் பிரயாணத்துக்கிருந்த சாதகம் இனிக் கிடைக்காது. இதுவரையில் போய்க்கொண் டிருந்த ரயில்வண்டிகள் சில நிறுத்தப்பட்டும் மற்றவையின் வேகம் குறைக்கப்பட்டும் இருக் கிறது. ஏனென்றால் நிலக்கரி போதுமான தாயில்லை யென்கிறார்கள். தென்னிந்தியா ரயில்வேயில் இதற்குமுன் 4-வண்டித்தொடர் கள் ஓடிக்கொண்டிருந்தன. அவற்றில் ஒன்று நிறுத்தப்படும். மெயில் டிரெயினிலும் பிரயாணிகள் போகும் எக்ஸ் ப்ரெஸ் வண்டிகளிலுமுள்ள "ரிப்ரெஷ்மெண்ட் கார்"—சிற்றுண்டி வண்டிகள் எடுத்துவிடப் படும். அதற்கு பதிலாக முக்கிய ஸ்டேஷன் களில் வண்டித்தொடர்கள் அதிகமாய் நிற்கும். மெயில்வண்டிமட்டும் மணிக்கு 30 மயில் விகிதம் ஓடும். மற்றவண்டிகள் மணிக்கு 20-மயில்தான் ஓடும். ரயில் சார்ஜும் அதி கரிக்கப்பட்டிருக்கிறது. மெயில் வண்டிகளு க்கு 1-க்கு $1\frac{1}{2}$ ஆக உயர்த்தப்பட்டிருக்கிறது. பிரயாணிகள் ஏறிச்செல்லும் வண்டிகளில் போகிறவர்களுக்கு ஒன்றுக்கு ஒன்றேகாலாக சார்ஜ் அதிகரிக்கப்பட்டிருக்கிறது. இவை போன்ற இன்னும் சிலபிரதிகூலமான கட்டுப் பாடுகள் செய்யப்பட்டிருப்பதோடு ஜனங் கள் அத்தியாவசியமாக விருந்தாலொழிய ரயில்பிரயாணம் செய்வதை நிறுத்திவைத்தல் நலமென்று அவர்களுக்கு உபதேசமும்செய்து வருகிறார்கள். சரக்குகள் ஏற்றுவதும் இப்ப டியே குறைபட்டுப்போகும். இஃதெல்லாம் யுத்த நிர்ப்பந்தங்களினால் நேர்ந்த செட்டுமட்டு திதானம் என்று சொல்கிறார்கள். ஐரோப் பாவில் நடக்கும் சண்டையின் பாரம் அத் தேசங்களிலுள்ள குடிகள் தலையில் நன்றாக உறைத்துவர நாம் தூர இருப்பதினால் ஒரு வாறு அதை அவ்வளவாக உணராமலிருந் தோம். இப்பொழுது அவை நம்தேசஜனங்கள் தலையிலும் உறைக்கத்தலைப்பட்டிருக்கிறது. அடுத்த ஏப்ரல் மாதம்முதல் வரியை உயர்த்த வும் யுத்தச்செலவுக்கு இந்தியாவில் கடன் வாங்கி பணம் அனுப்பவும் ஏற்பாடு செய் யப்படும்.